ஜகத்குரு

ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹாஸ்வாமிகள்

# பிள்ளைத்தமிழ்



கவிஞர் தமிழ்க்குழவி

குறளகம்

# ஜகத்குரு
# ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹாஸ்வாமிகள்
# பிள்ளைத்தமிழ்

செழுந்தமிழ்ச் செம்மல்

## கவிஞர் தமிழ்க்குழவி
## குறளகம்


வெளியீடு :

ஸ்ரீ ஹரிஹர சேவா டிரஸ்ட்

ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம்

அக்ரஹாரம், நெரூர்–639004.

போன் : 9443514413, 04324-282263

# நூல் விளக்கம்


நூல் : ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹாஸ்வாமிகள் பிள்ளைத்தமிழ்

நூல் வகை : மரபுக் கவிதை

நூல் ஆசிரியர் : கவிஞர் தமிழ்க்குழவி
குறளகம்
51, கீழராமன்புதூர்,
நாகர்கோவில் – 629 002
கைப்பேசி : 94425 80620

முதல் பதிப்பு : 2014

பக்கம் : 108

அச்சாக்கம் : S. சுனிதா, ஸ்டார் கம்ப்யூட்டர்ஸ்
177, A.S.T. காம்ப்ளக்ஸ்,
சிதம்பரநகர் சந்திப்பு, P.W.D. ரோடு,
நாகர்கோவில். செல் : 97891 24123

நூல் வெளியீடு : **ஸ்ரீ ஹரிஹர சேவா ட்ரஸ்ட்**
**ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம்**
அக்ரஹாரம், நெரூர்–639004.
போன் : 9443514413, 04324-282263

நன்றி

கவிதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ள மகாசுவாமிகள் பற்றிய நிகழ்வுகள் யாவற்றிற்கும் ஆதாரமாக அமைந்த நூல் :
Jagadguru Sri Chandrasekhara Bharati Mahaswami - by Sri. A.R. Natarajan
Ramanamaharishi Centre for Learning, Bangalore.

# ஆசியுரை

ஸ்ரீ வித்யா சங்கர ஸரஸ்வதி ஸ்வாமிகள்
ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம்
அக்ரஹாரம், நெரூர்–639004.

## ஜெய் ஸ்ரீராம்

ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி பிள்ளைத்தமிழ் எனும் இந்நூல் மிக மிக உயர்ந்த ஜீவன் முத்தரைப் பற்றியது. மனிதனாகப் பிறந்த பயன் மோக்ஷமடைவதே. அதை இந்த மனிதப் பிறவியிலேயே நமக்கு சமீபகாலத்திலேயே அடைந்த மஹா புருஷர் ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மகாஸ்வாமிகள்.

ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹாஸ்வாமிகள் அவர்கள் பெயரைச் சொல்வதற்கே புண்ணியம் செய்து இருக்க வேண்டும். அப்படி அம்பாளின் அவதாரமான அந்த மஹானை துதிப்பது என்பது எத்தனையோ ஜன்மங்களில் செய்த தவம்தான் என்பதில் ஐயமில்லை.

ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹாஸ்வாமிகள் தான் அடியேனின் ப்ராணன். அவர்களைத்தவிர வேறொன்றும் இல்லை. இதுதான் ஸத்தியம். திரு. தமிழ்க்குழவி அவர்கள் மிகவும் சிறந்த படிப்பாளி. இங்கு படிப்பாளி என்று குறிப்பதன் காரணம் படிப்பு வளர வளர பண்பும் வளர வேண்டும் (வித்யா ததாதி விநயம்) அந்த பண்பு மிக்கவர். அவர் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் பிள்ளைத்தமிழ் எழுதி, பின் ஸ்ரீ சீரடிசாய்பாபா பிள்ளைத்தமிழ் எழுதி வெளியிட்ட போது அடியேன் அவரிடம் ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹானைப் பற்றி சொல்லி ஒரு பிள்ளைத்தமிழ் எழுத வேண்டும் என்று கூறினேன். அவரும் உடனே எழுதுவதாகவும் அவரைப்பற்றி நன்கு தெரியாது, அவரைப்பற்றி ஏதாவது நூல் இருந்தால் வசதியாக இருக்கும் என்றும் கூறினார். அடியேனும் அவரிடம் ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி ஸ்வாமிகளைப் பற்றிய இரண்டு நூல்களைக் கொடுத்தேன். சில நாட்களில் பிள்ளைத்தமிழ் எழுதி

ஆகிவிட்டது என்று அந்த இரண்டு நூல்களையும் கொடுத்தார். வெறும் நூலை மாத்திரம் பார்த்து இப்படி எழுதுவது என்பது ஆகாத காரியம்.

இது குருநாதரே அவருக்கு தன்னைக் காட்டி கவிதையில் அதைக் கூட்டி வைத்திருக்கிறார். அதன் பின்பு பள்ளியெழுச்சி, அருட்பா இருபது போன்றவற்றையும் படைத்துள்ளார். இவைகளெல்லாம் ஸ்ரீ குருநாதர் க்ருபையே. இது கவிமாத்திரம் அல்ல ப்ரார்த்தனைப் பனுவல். குருவின் மஹிமை சொல்லி முடியாது. குருவைப் போற்றினால் சிவனைப் போற்றுவதே ஆகும். ஆதலால் இதை எல்லோரும் பக்தியுடன் படித்து பயன்பெற அம்பிகை அருள் புரிவாளாக. இதில் இன்னொரு விசேஷம். இந்த பிள்ளைத்தமிழ்ப் பனுவல் நமது ஆஸ்ரமத்தின் முதல் நூல் வெளியீடு என்பதில் மிக மிக மகிழ்ச்சி.

இந்த நூல் வெளியிட உதவிய அனைத்து ஆஸ்ரம நிர்வாகிகளுக்கும், பக்தர்களுக்கும் ஸ்ரீகுருநாதர் க்ருபை புரிய ப்ரார்த்திக்கிறேன். திரு. தமிழ்க்குழவி அவர்களுக்கு என்றென்றும் அடியேனின் பிரார்த்தனை கலந்த ஆசிகள். அவர் இதே போல் நிறைய ஸத்காரியங்கள் செய்ய அம்பாளை பிரார்த்திக்கிறேன். இந்த பிள்ளைத்தமிழ் நூல் அடியேனுடைய ஹ்ருதய வாசியான ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளுக்கும் ஸ்ரீச்ருங்கேரி சாரதா பீடாதிபதியும் ஸ்ரீ சாரதாம்பாளின் அபரரூபமான ஜகத்குரு அனந்த ஸ்ரீ விபூஷித ஸ்ரீ ஸ்ரீ பாரதி தீர்த்த மஹா ஸ்வாமிகளுக்கும் சமர்ப்பணம். ஸ்ரீ ஸ்ரீ பாரதி தீர்த்த மஹா ஸ்வாமிகளின் பாதார விந்தங்களில் நமஸ்காரங்களுடன் இந்த நூல் சமர்பிக்கப்படுகிறது.

ப்ரணதிம் – ப்ரணதிம் : ஸதாசிவேந்திராய!!

ஜயது – குருவரோஸௌசந்திரசேகர பாரதி!!

வைகுண்டஏகாதசி — ஸ்ரீ வித்யா சங்கர ஸரஸ்வதி
11–01–2014 — ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம்
நெரூர் — அக்ரஹாரம், நெரூர்–639004.

# பதிப்புரை

அன்பார்ந்த வாசகர்களே, வணக்கம்! நமஸ்காரம்.

கரூர் அருகில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திராள் அவர்கள் ஜீவசமாதி அமைந்திருக்கும் நெரூரில் உள்ள அக்ரஹாரத்தில் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ வித்யா சங்கர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் வழிகாட்டுதலின் பேரில் ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ம ஆஸ்ரமமும் மற்றும் ஸ்ரீ ஹரிஹர சேவா டிரஸ்ட்டும் சிறப்பான முறையில் நடந்து வருகிறது. எங்களது ஆசிரமம் மற்றும் டிரஸ்ட் மூலமாக பல ஆன்மீகப் பணிகளும் சத்சங்கங்களும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஆஸ்ரமத்தின் பிரதான தெய்வமாக ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ லெக்ஷ்மி நருஸிம்ஹருக்கும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சோமசுந்தரேஸ்வரருக்கும் வருடாவருடம் மார்கழி மாதத்தில் சிறப்பாக திருமண வைபவங்கள் முறைப்படி நடைபெற்று வருகிறது. மாதா மாதம் பௌர்ணமி மற்றும் அமாவாசை தினங்களில் சிறப்பு பூஜைகளும், ஆண்டில் 4 நவராத்திரிகளும் வாரந்தோறும் காயத்ரி ஹோமங்களும் சம்பிரதாய முறைப்படி விமரிசையாக நடந்து வருகிறது. எங்கள் சத்சங்கங்களில் ஒன்று அத்வைத சபா. ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள் அவர்களின் அத்வைத சித்தாந்தத்தை விளக்கும் வகையில் மாதந்தோறும் சத்சங்கங்கள் நடத்தி, அதில் எங்கள் குருநாதர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ வித்யாசங்கர ஸரஸ்வதி ஸ்வாமிகள் நல்ல பல சிந்தனைக்கருத்துகளை விளக்கமாகவும், அனைவருக்கும் புரியும்படியும் கூறி வருகிறார்.

எங்களது குருவின் வாக்குப்படி ஸ்ரீ ஆதிசங்கரர் பகவத்பாதாள் ஸ்ரீ சர்வேஸ்வரரின் மறுபிறவி. லோக சேமத்திற்காக அவர் திரும்பப்பிறவி எடுத்தது ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளாக. அவர் பல ஆண்டுகளாக ஸ்ரீ சிருங்கேரி பீட நாயகராக இருந்து பல அற்புதங்களை நிகழ்த்தியவர். எங்கள் குருநாதர், ஆண்டவருக்கு இணையாக பாவிக்கும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகள் பற்றி நல்ல ஒரு நூலை எங்களது டிரஸ்ட்டின் மூலம் வெளியிட வேண்டும் என்று விரும்பினார். ஒரு தடவை திரு. தமிழ்க்குழவி (இந்த நூலின் ஆசிரியர்) என்பவர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ வித்யாசங்கர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்களை அணுகி தான் எழுதியுள்ள ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் பிள்ளைத்தமிழ் நூலை வெளியிடுமாறு கேட்டுக்கொண்டார். அந்த

நூலின் எளிமையான நடையை, கருத்தாழம் உள்ள வரிகளைப் பார்த்து எங்கள் குருநாதர் அவரிடம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளைப் பற்றி பிள்ளைத்தமிழிலே ஒரு நூல் வெளியிட வேண்டுமென்ற தன் விருப்பத்தைக் கூறினார். மேலும் தன்னாலியன்ற அனைத்து உதவிகளையும் செய்வதாகக் கூறினார். அவரும் சம்மதித்து, இந்த அழகான நூலை எழுதித் தொகுத்து எங்கள் டிரஸ்ட் மற்றும் ஆசிரமம் மூலம் வெளியிடச் செய்துள்ளார். திரு. தமிழ்க்குழவி அவர்கள் ஸ்ரீ சீரடி சாய்பாபா மற்றும் ஸ்ரீ ரமண மகரிஷி பற்றியும் பிள்ளைத்தமிழ் நூல்கள் வெளியிட்டுள்ளார்.

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளின் முழு விவரத்தையும் கொடுப்பது என்பது இயலாத காரியம். ஏனென்றால் கடவுளின் பிரதாபங்கள் இவ்வளவு தான் என்று எப்படி வரையறுக்க முடியாதோ, அதே போலத்தான். இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ளது மிகக்குறைந்த அளவேதான். அதை வைத்துக் கொண்டு படிப்பவர்கள் மேலும் அவரைத் தேட முயற்சிக்கவும்.

திரு. தமிழ்க்குழவி என்பவர் முன்னாள் B.S.N.L. அதிகாரி தனது பணிநிறைவுக்குப் பிறகு நல்ல ஆன்மீக சிந்தனைகளைத் தூண்டும் பல நூல்களைத் தன் சொந்த செலவில் வெளியிட்டு வருகிறார். இந்த நூலை வெளியிட இசைந்த எங்கள் டிரஸ்ட் மற்றும் ஆஸ்ரம நிர்வாகிகளுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதன் பதிப்புரை வழங்கப் பணித்த மற்றும் அனுமதி வழங்கிய எங்கள் குருநாதருக்கு என்னுடைய நமஸ்காரங்களை காணிக்கையாக்குகிறேன். பல வேலைப் பளுவுக்குமிடையில் இந்த அற்புத பொக்கிஷத்தை அழகிய பிள்ளைத்தமிழில் எழுதிய ஆசிரியர் திரு. தமிழ்க்குழவிக்கும் எங்கள் டிரஸ்ட் மற்றும் ஆசிரமம் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். எங்கள் டிரஸ்டின் சேவையும் தேடலும் தொடர வாழ்த்துமாறு வாசக அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன். இது ஒரு இலவச வெளியீடு.

நெரூர்
16–01–2014

இப்படிக்கு
**S. ஸ்ரீதரன்**
செயலாளர், ஸ்ரீ ஹரிஹர சேவா டிரஸ்ட்
ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ம ஆசிரமம்

# அணிந்துரை



புலவர் **வே. இராமசுவாமி,** எம்.ஏ., பி.எட்.,
நிறுவனத்தலைவர்,
செந்தமிழ் அருள்நெறிப்பேரவை
விசுவப்பிரம்ப எழிலகம்,
கற்காடு, சுசீந்திரம்–629704.

"யாகத்தி லேதவ வேகத்திலே – தனி
யோகத்தி லேபல போகத்திலே
ஆகத்தி லேதெய்வ பக்தி கொண்டார்தம்
அருளினி லேஉயர் நாடு" என்றார் பாரதியார்

பாரத நாடு பழம்பெரும் நாடு, தவம், யாகம், யோகம், போகம், பக்தி, அருள் ஆகியவற்றைக் கொண்டு ஆன்மீகத்தில் உயர்ந்துள்ளது. இந்நாட்டில் அவதாரம் செய்த அருளாளர்கள், ஞானியர்கள் அருளிச்செய்துள்ள தத்துவங்களையும், உபதேசங்களையும் அருள்வாக்குகளையும் தெரிந்து தெளிந்தால் இறையனுபவத்தைப் பெற்று ஞானமும் அமைதியும் பெறலாம்.

மக்களின் மனத்தையும், வாழ்க்கையையும் பண்படுத்தி வாழ வழிகாட்டும் ஞானிகளின் அறிவுரைகள் வாழ்வாங்கு வாழ வழி செய்கிறது. அத்தகைய ஞானியருள் சிருங்சேரி சாரதாபீடம் ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகள் அவர்கள் போற்றுதலுக்கும் வணக்கத்திற்கும் உரியவராவார். அவரைத் தெய்வக் குழந்தையாகக் கொண்டு கவிஞர் தமிழ்க்குழவி பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

இறைவனின் திருவடி நிழலைப் பெற்ற ஞானியர், அருளாளர்கள் உலகப்பற்றறுத்து வாழ்ந்த வாழ்வு மக்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்குகிறது. புலன்கள் வழிவரும் இன்பங்களை அனுபவிக்கின்ற மனிதன் எளிதில் திருப்தி அடைவதில்லை. நிறைவு அடையாத எண்ணங்களை மடைமாற்றம் செய்து இறைவனின் திருவருள் பக்கம் திருப்பினால் நிறைவு உண்டாகும்.

"நேசத்தால் நின்னை நினைக்கும் நினைவுடையார்
ஆசைக் கடலில் அழுந்தார் பராபரமே" என்றார் தாயுமானவர். அறிவுக்கு அகப்படாத, புலன்களுக்குப் புலப்படாத விசயங்கள் உலகில் நிரம்ப உள்ளன. அவை விதிவழி செல்வனவாம்.

ஐம்புல னவித்த அறிவின் மதியன் அய்யன் சந்திர சேகர அழகன் (7–1) என்ற வரிகளில் உண்மை நிலையை உணர்த்துகிறார் கவிஞர். மனிதன் தன் மனத்திலுள்ள மாய இருளை அகற்றிட இறைவன் திருவருளே வழி செய்யும் என்பதை மந்திரங்கள் செபிப்பதனால் மனத்தில் ஒளிதோன்றும், மனத்தில் ஒளி தோன்றுமெனில் மாயஇருள் நீங்கும் (4–1) என்றும் ஓங்காரம் அன்பையும் அறிவையும் வளர்த்து உயிரை ஓம்புகிறப் பண்பை வளரச்செய்து அனுபவ ஞானமுதிர்வுகளை மேம்படுத்தக் கூடிய தென்பதை ஓங்கார அன்பைப் பண்பகத்தில் பயிர்செய்தால் பலனுண்டு என்கிற வரிகளிலும் கவிஞர் சுட்டிக்காட்டுகிறார்.

ஜகத்குரு திருமறைகளைப் பயின்று ஆழ்ந்த புலமை கொண்டவர். "திருமறைகள் புகழ்கின்ற சிவமே, தன்னில் சிந்தனையின் பொலிவாகித் திகழும் அய்யா" (5:4) என்பார் கவிஞர் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற செயல்களைக்கடந்து நிற்பவர் ஜகத்குரு என்பதை "முதலாகி நிகழ்வாகி முடிவு மாகி மும்மையும் வென்றெடுத்துலக முற்றாய் நிற்றாய்" (6:9) என முத்தொழிலின் தன்மையை விளக்கிப்பாடுவது அருமை.

இறைவனை ஒலி ஒளியாகக் கொண்டு நமச்சிவாய மந்திரத்தைப் போற்றி நலம் பெறலாம் என்பதை "நாதம் விந்து நம சிவாயம் நம்மவர் பண்ணாக, நாடி துய்த்தவர் நாளும் வாழ்வினில் நன்மை பெறுவரன்றோ" (9:2) என்பார் கவிஞர். இவ்வரிகள் அருணகிரிநாதர் நாதவிந்து கலாதி நமோ நமோ என்று கூறும் தத்துவத்தின் விளக்கமாக அமைந்துள்ளன.

"மூழ்கும் நித்திய மோனத்தவத்தினில் முன்வினை அறுகிறது, முத்திரைப்பதிக்கும் இத்தரை வாழ்வில் மோகனம் மலர்கிறது" (8:4) இவ்வரிகள் ஆன்மீகச் சிந்தனைகளைத் தூண்டி நன்மை விளைவிக்கின்றன.

இறைவன் திருவடியைச் செல்வமாக நாளும் போற்றுவார்க்கு வெற்றியுண்டு, வாழ்வும் உண்டு என்பதைத் "திரவிய மாகத் தேடிய ஆன்மத் திருவடி கொற்றமுண்டு" (8:6) என்று கூறி யாவரையும் ஆன்ம ஞானம் பெறத்தூண்டுகிறார். "சாதி சமய பேதமற்று சகலபேர்க்கும் அருள்கூட்டும் சாதக" (10:7) என்று கூறுவது வள்ளலாரின் எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் என்று கூறும் வைர அடிகளை ஒத்திருக்கிறது.

கவிஞரின் பிள்ளைத்தமிழில் குவளைமலர்கள் தலையை நீட்டுவது போல் திருவள்ளுவர், வள்ளலார், அருணகிரியார், பாரதியார் மற்றும் திருமறைக் கருத்துகளும் சிறப்பாகக் காணப்படுகின்றன. உலகில் மாறாதது என்று எதுவுமில்லை. காலம் மாறும், காட்சிகள் மாறும், அதுவும், இதுவும், எதுவும் கடந்து போகும் என்ற உயர்ந்த சிந்தனைகள் மலர்ந்து மணம் பரப்புகின்றன.

ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ சந்திர சேகர பாரதி மஹா ஸ்வாமிகள் பொற்பாதங்களில் என் சிரம் தாழ்ந்த வணக்கத்தைக் காணிக்கையாக்கி வணங்குகிறேன். மஹா ஸ்வாமிகளின் தத்துவங்கள், உபதேசங்கள் எல்லாம் பிள்ளைத்தமிழ் நூல் வடிவில் இயற்றியுள்ள தமிழ்க்குழவி திரு. ஆ. விஸ்வநாதன் அவர்களை வாழ்த்துகிறேன். அவர் பணிகள் சிறக்க என் அன்பு ஆசிகள்.

சுசீந்திரம் **புலவர். வே. இராமசுவாமி**
10–9–2013 தலைவர், செந்தமிழ் அருள்நெறிப்பேரவை

# ஆய்வுரை



சித்தாந்த ரத்தினம், திருமுறை மாமணி,
ஞானஒளித்திருத்தொண்டர், அருள்நிறை நாவலர்
பேரா. **மு. பத்மநாபபிள்ளை**
முன்னாள் முதல்வர், அண்ணா கல்லூரி
ஆரல்வாய்மொழி, குமரிமாவட்டம்.

"சிருங்கேரி சாரதா பீடம் ஸ்ரீ சந்திரசேகர பாரதி பிள்ளைத்தமிழ்" எனும் இக்கவிதை நூலின் ஆசிரியர் குறளகம் தமிழ்க்குழவி திரு. விசுவநாதன் அவர்கள் என் இனிய நண்பரும், முன்னாள் மாணவருமாவார். அவர் காட்சிக்கு எளியவர். பேச்சில் கனிவானவர். பயின்றது அறிவியலானாலும், பணியாற்றியது தொலைத்தொடர்புத்துறையானாலும், தமிழில் தாழா வேட்கை கொண்டவர். தான் சொல்ல விழைவதைக் குறள்போல் சுருக்கமாகவும் ஆழ்ந்த கருத்துக்கருவூலமாகவும் எழுதுவதில் வல்லவர். இவர் படைத்துள்ள பல்வேறு கவிதை நூற்களும் பிற ஆய்வுரைகளும் என் கூற்றிற்குச் சான்றாகும். உலகப் பொதுமறையாம் வள்ளுவத்தில் கொண்ட அளப்பரிய ஈடுபாட்டு உந்தலால் "குறளகம்" எனும் சீரிய அமைப்பை நிறுவி பல்லாண்டுகளாகக் குறள் பணியாற்றி வருகிறார்.

உங்கள் கையில் தவழும் இக்கவிதைநூல், இயல்பாகவே ஆன்மிகச் சிந்தனையுடைய கவிஞர் தமிழ்க்குழவி அவர்களின் கவிபுனையும் ஆற்றலுக்கும், கற்பனை வளத்திற்கும் நுண்மாண் நுழைபுலமொத்த புலமைக்கும் களமிட்டுக்காட்டும்.

கவிஞர் இந்நூலை படைத்திடப்பணித்து பயன்நிறை பல குறிப்புகளையும் கொடுத்து ஆக்கமும் ஊக்கமும் நல்கிட்ட ஸ்ரீ வித்யாசங்கர சரஸ்வதி சுவாமிகளை நன்றியோடு நயம்படச் சொல்லி, அவர் பெருமை பேசி அந்தாதியும் பிறவும் பாடிப் போற்றுகிறார். "ஆலம் விதை ஒன்று அகல் மரமானது" என்கிறார் தெள்ளிய ஆலின் திரள்பழத்தொருவிதை, தண்ணீர் கயத்துச் சினையின் நுண்ணியதாயினும், அண்ணல் யானை அணிசேர் புரவி, ஆள் பெரும்படையுடன் மன்னர்க்கிருக்க நிழலாகும் என்ற பழம்பாடல் வரிகள் நினைவிற்கு வருகின்றன.

ஆசிரியர் நூலைத் தொடங்குமுகத்தான் இறைவணக்கம் தருபோது

அன்னையைத் தந்தையை ஆசானை என்றுமுள
இன்னருள் தெய்வத்தை இன்தமிழைச் – சென்னிமிகத்
தாழ்ந்து வணங்குவன் என்கிறார். எவனொருவன் இல்லாமலிருந்த நம்மை இவ்வுலகில் இருக்கச் செய்த அன்னை, பெயர் சொல்லச் செய்த தந்தை, நல்லறம் கற்பித்த நல்லாசான் பீடுடைய பெம்மான் போன்றோரை நெஞ்சில் நிறுத்தி வணங்கி மகிழ்கிறானோ அவன் எல்லாம் பெறுவான் என்பது ஆன்றோர் வாக்கு.

அகரத்தமிழால் ஆசிரியர் ஆதிசங்கரர் கண்ட அத்வைதத் தத்துவம் பற்றி "கடவுள் ஆன்மா அத்வைதச் சீர் கருத்து தந்தவனே" என்கிறார். "எண்ணம் நீர்த்திடின் எவரும் இறையெனப் பேசுகிறார்". உயர்ந்த ஆன்மிக தத்துவத்தை ஆசிரியர் வெகு தெளிவாகக் கையாண்டிருப்பது பாராட்டிற்குரியது.

கவிஞர் தன் படைப்பின் பாட்டுடை நாயகனாக சிருங்கேரி ஸ்ரீ சாரதாமடத்தின் முப்பத்தி நான்காம் மகானாக (மடாதிபதி) சிவநெறி போற்றி ஈஸ்வரச் சிந்தையுடன் சிவமாய் இப்புவியிலிருந்த ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா சுவாமிகளை மனம் மகிழ்ந்து மாதேவன் புகழ் மணக்கப்பாடுகிறார். சந்திரசேகரர் கோபாலசாஸ்திரி லட்சம்மா தம்பதியர்க்குப் பன்னிரெண்டாவது மகனாக (முன் பிறந்த பதினொரு பேரும் பிறந்து இறந்துவிட்டனர் என்பது செய்தி) கோகர்ணத்து மகாலிங்கேஸ்வரர் அருளால் அவதரித்தார். சிம்மராசியில் மகம் நட்சத்திரத்தில் பிறந்தமையால் பொன்மேனி, தாமரை வதனம், இகபரம் ஆளும் வல்லமை,கல்வி கேள்வியில் ஞானம் மிகப்பெற்று வேதம் போற்றி இறைச்சிந்தனை மிக்கவராய்த் திகழ்ந்தார். அவர் பலத்திருத்தலங்களுக்கும் திருஉலாச் சென்று வந்த நற்செய்தியை ஆசிரியர் முறையாக நவில்கிறார்.

இந்நூலில் பல்வேறு தலைப்புகளில் ஏறத்தாழ 213 பாடல்கள் உள்ளன.

பிள்ளைத்தமிழ் என்பது தமிழ் இலக்கியத்திலமைந்துள்ள 96 சிற்றிலங்கியங்களுள் ஒன்று. இறைவனையோ, மன்னனையோ அல்லது மக்களுள் ஒப்புயர்வற்ற ஒருவரையோ பாட்டுடைத் தலைவனாக்கிக் குழந்தையாகப் பாவித்து அக்குழந்தையின் வளர்ச்சியினைப் பத்து பருவங்களாக்கி ஒவ்வொரு பருவத்திற்கும் பத்துப்பாட்டுகள் வீதம் நூறுபாடல்கள் பாடிப் போற்றுவதாகும். தசாவதாரத் தத்துவத்தை அறிவியலடிப்படையில் பரிணாம வளர்ச்சியோடு ஒப்பிட்டுப் பேசுவது போல் பிள்ளைத்தமிழ்ப்

பருவங்களும் கிடந்தான், நிமிர்ந்தான், நடந்தான் என்கிற மூன்று நிலைகளில் பேசப்படுகின்றன.

ஒட்டக்கூத்தரின் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத்தமிழ், பிள்ளைத்தமிழின் முதல் நூலாகும். குமரகுருபரர் தந்த மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய "அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்" போன்றவை போற்றற்குரியன.

காப்புப்பருவம் என்பது கடவுள் வாழ்த்தாகவும், பாட்டுடைத் தலைவனை எவ்வித தீங்குமின்றிச் செவ்வனே காத்திட வேண்டியும் பாடப்படுவதாகும். இறைவனை தென்னாடுடைய சிவனே போற்றி என்று வாழ்த்தி பாட்டுடைத் தலைவன் சந்திரசேகர பாரதியைக் காத்திட வேண்டுகிறார் (பா.1:1) இங்கே சிவபெருமை சேர்க்கும் வகையில் இறைவனின் பல்வேறு திருவிளையாடல்களை நயமாக எடுத்துரைத்தமை போற்றற்பாலது. (பா 1,2,3,4,5,6,8)

செங்கீரைப் பருவமென்பது ஐந்துமாதப் பிள்ளைதவழும் பருவமாகும். இப்பருவத்தில் குழந்தையைக் கிளிப்பிள்ளையாகப் பாவித்து பாடப்படும். கவிஞர்கள் இப்பருவத்துக் குழந்தைகள் மூலமாக தங்கள் விருப்பத்தை வெளிக்கொணர்வர். கவிஞர் செகமுய்ய வந்துதித்த செல்வ பாரதியை "மெய்ஞ்ஞான விதையைப் போல நீ இருந்தாய்", "திண்மனதில் வைராக்கியம் தெளிவான நுண்ணறிவு தீபம் போல் ஒளிரும் அய்யா", "தீதகற்ற வையகத்தின் தீமையற வந்துதித்தத் தெய்வீக மலரே" என்றெல்லாம் பேசி செங்கீரை ஆடி அருளவேண்டுகிறார். மக நட்சத்திரத்தில் சிம்ம ராசியில் பிறந்த மாண்பினை அழகாகப் பேசுகிறார் (பா. 2:8)

எட்டாம் மாதம் குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுப்பாடி மகிழ்வது (தால்–நாக்கு, ஆட்டு–அசைப்பது). இப்பருவம் குழந்தை ஒலிகேட்டு உணரும் பருவம். கலைகள் எல்லாம் கற்றுத் துறைபோகி, இறையனுபூதி பெற்று நிலையில் திரியாது அடங்கி மலைபோலுயர்ந்து நிற்கும் மாண்பினை ஆசிரியர் பேசுகிறார் (பா. 3:1) இறைஞானத்தில் இதயம் தோய்ந்து நிற்றலையும் (பா. 3:3) முக்திபெறும் முனைப்பு முளையில் தோன்றியதையும் (பா. 3:4) தன்னையே தானறிந்த நிலையையும் (பா. 3:7) சிருங்கேரி சிவத்தொண்டினையும் (பா. 3:8) பாராட்டி பாட்டுடைத் தலைவனை தாலே லோ எனத் தாலாட்டி மகிழ்கிறார்.

அடுத்த பருவம் ஒன்பது மாதக்குழந்தை உட்கார்ந்து கைதட்டி மகிழும் சப்பாணிப் பருவமாகும். இங்கு ஆசிரியர் நாம மந்திரங்கள் செபித்து, மாயை நீக்கி, மனதில் ஒளிபெற்று (பா. 4, 1,2,3) உலகத்து நிலையாமை உணர்ந்து (பா.4:4) புலனுகர்விற்கு

அடிமையாகாது மனதை ஒருமுனைப்படுத்தி மகிமை சேர்க்க வேண்டிய தத்துவமுரைக்கிறார். இன்றைய உலகியலைக் கண்ட ஆசிரியர் "மண்புவியில் அறங்களெல்லாம் மாண்டனவோ? எங்கும் மமதைகளே அரசாள மறுமலர்ச்சி காண்பதென்று" எனக் கேட்கிறார். "மாங்காய்ப் பாலுண்டவர் மலைமேல் நிற்க, மந்திரமே அறியாத மடையன் நானும் நீங்காத வினைகளுக்குள் நின்று கொண்டு நினைக்கின்றேன் உன்பாதம்" (பா.4:6) என்று ஆசிரியர் கூறும்போது, குதம்பைச் சித்தரின் பாடல் வரிகள் நினைவுக்கு வருகின்றன. நிலையில்லாது அலையும் மனதை ஒருமுனைப் படுத்துவதே மந்திரம் எனப்படும். மந்திரத்தை ஆவாகனம் செய்வது எந்திரம் எனப்படும். இறைநெறி, யோக நெறி, நூல்நெறி போன்ற நெறிகளுரைத்து நிற்பது தந்திரம் எனப்படும். இங்கு ஆசிரியரின் ஆன்மிகத்தின் பன்முகப் பார்வையும் புலமையும் புலனாதல் அறிக.

முத்தப்பருவத்தில் (பதினொராம் மாதம்) குழந்தையை பெற்றவரும் மற்றவரும் முத்தம் தரக்கேட்டு நிற்பது கூறப்படும். இங்கே குழந்தையின் சிறப்புரைத்து வருக மகிழ்முத்தம் தருக என வேண்டுவர். கவிஞர் தன் நாயகனின் சிறப்புரைக்கையில் சத்தியனே, கொற்றவனே, நாயகனே என்றெல்லாம் போற்றி வியந்து மகிழ்கிறார் (பா. 3:2,3,4) "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்ற உண்மையையும் (பா. 5:5) ஜீவாத்மா பரமாத்மா தத்துவத்தையும் (பா. 5:5) பேசி ஆனந்த மோகனனை அழைத்து தருக ஒரு முத்தம் என வேண்டுகிறார்.

பனிரெண்டாம் மாதத்தில் குழந்தை நடைபயிலத் துடித்துத் தத்தித்தத்தித் தளர் நடைபோட்டு வரும் வருகைப்பருவம் பேசப்படும். இப்பருவத்தில் சிறுகை நீட்டிக் குறுகுறு நடந்து திருவடிகள் நிலத்தில் பதிய வரும் குழந்தையை ஆசிரியர் பாடுகிறார். அறிவு அறியாமை எனும் அகவிருள் அகற்றல் போல இறையருளால் வினைகள் மறைதல் போல, மகிழ்வு தர வருக அருள் தருக என வேண்டுகிறார் (பா. 5:1,2) உடம்பிருக்க ஆன்மாவைத் தனித்தறிந்து உன்னதத்தோடு உரையாடி உவகை கண்டு துறவு நிலை உற்ற தேவா (பா. 6:7) என்று அழைக்கிறார். ஆன்மாவும் (உயிர்) உடலும் ஒன்றியிருத்தலை உயிர்மேவிய உடல் என்பர். உயிர் உடலுடன் இருப்பது வரை இவ்வுடலை ஆன்மா (உயிர்) தாங்கும். தடுத்தாட்கொளல் தத்துவத்தை ஆசிரியர் தெளிவாகக் கூறுகிறார். பாடல் (6:10). இதனால் எல்லோரும் இறைவனிடம் விண்ணப்பம் செய்வதுபோல் நம் கவிஞரும் வேண்டுதல் விண்ணப்பம் வைக்கிறார்.

நிலா நிலா ஓடிவா நில்லாமல் ஓடிவா என நிலவைத் துணைக்கழைத்து, பதினைந்தாம் மாதத்தில் விளையாட்டுக் காட்டிக் குழந்தையை உண்ணச் செய்யும் பருவம் அம்புலிப்பருவம். அம்புலியின் சிறப்பைக் குழந்தைக்கும், குழந்தையின் பெருமையை அம்புலிக்கும் உரைப்பதுபோல் உரைத்து விளையாட வந்தால் தருபொருள் உரைத்து வரவில்லையெனில் என்ன நிகழும் என்று எச்சரிப்பது போலும் அமைத்துப்பாடுவர் (பா. 7:1,2) பா.7:3–ல் நிலவில் வளர்பிறை தேய்பிறை சந்திரகிரகணம் பற்றிப்பேசி, தன் கதாநாயகன் நிலவினும் பீடுடையான் என்கிறார். இப்பருவத்தில் சாம, பேத, தான, தண்ட உபாயங்கள் உரைத்து நிற்பது போற்றற்பாலது.

சுமார் பதினைந்து (பதினேழு) மாத பருவமுடைய ஆண் குழந்தைகள் சிறு மணல் வீடுகட்டி விளையாடும் போது பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை அவ்வீடுகளைச் சிதைத்து விடாமல் காத்தருள வேண்டி பாடப்படும் பருவம் சிற்றில் பருவம். சிவநெறிச் செம்மலான சேகரனே தான் தீந்தமிழ்க்கவியால் கட்டியச் சிற்றில் சிதையேலே என ஆசிரியர் வேண்டுகிறார். (பா.8:1) நாயினும் இழிந்த கடையேன் ஆயினும் என்னிடம் நன்றியுணர்வு உண்டு. எனவே என்னையும் காத்தருள்க என வேண்டுகிறார் (பா.8:2) இறையருள் இருந்தால் எல்லாம் நல்லாவே நடக்குமென்ற கோளறு பதிக உண்மையை ஆசிரியர் "நாளும் கோளும் என் செயுமய்யா நாதன் துணை இருந்தால்" என வினவி நிற்கிறார். தமிழாய்வோரைச் சாவு என்செயும் என வினவும்போது பிறதுறைச்சார்ந்தவராயினும் தமிழ்மீது அவரது பற்று புலனாகிறது (பா. 9:6,7). மேலும் ஆக்கம் விதியை அரட்டி மிரட்டும் "அன்பே நிலைத்து நிற்கும்" "ஊழ்வினைக் கொஞ்சம் உருத்து வந்தாலும் உழைப்பின் முன் மலைக்கும்" போன்ற வரிகள் ஆன்மீகச் சிந்தனைக்குரியன. இயற்கை அன்று கொழித்த வளம்குன்றி மாசேறி மனிதவேட்டைப் புலனாக மாறிச்சுற்றுச்சூழலை மாய்த்துவருவதுகண்டு தன் ஆதங்கத்தை ஆசிரியர் பேசுகிறார். கேடும் திருவும் கெட்ட நிலையினை விளக்கி பாரதி சொன்னதுபோல் சொல்கிறார் (பா. 8:10). தான் போற்றிக்கட்டிய கவிச்சிற்றிலைச் சிதையேலே என நெஞ்சுருக வேண்டுவது நயமுடைத்து.

சிறுபறை குழந்தையின் பத்தொன்பதாவது மாதத்தில் பாடப் படுவதாகும். இப்பருவத்தில் குழந்தைகள் பறையறைந்து ஒலியெழுப்பி விளையாடும். "காலடி பிறந்தவர் தாளடி பணிந்து

தவநிலை எய்தியவர்" என்றும் "நாலடி பொருளும் நற்றிருக்குறளும் நடத்திவண் வந்ததுவோ" என்றும் தன் பாட்டுடைத் தலைவனைப் பாராட்டி மகிழ்கிறார். நன்றும் தீதும் பிறர்தரா என்றுரைத்து வினைப்பயனை உணர்த்தும் வரிகள் அருமை. உவர்ப்புக்கடல் நீர் (பா.9:6) கதிரவன் ஒளியால் ஆவியாகி மேலேசென்று கார்முகிலாகி நன்னீர் மழையாய்ப் பொழிதல் போல அருள்சுரக்க வேண்டுகிறார். ஐயா வைகுண்டர் சொன்ன "தாழக்கிடப்பாரைத் தாங்குவதே தர்மம்" என்ற செய்தியை உணர்த்தி பாட்டுடைத் தலைவனை சிரித்த சிரிப்பில் சிறுமைகள் அகல சிறுபறை முழக்கி நிற்க வேண்டுகிறார் (பா. 9:6)

சிறுதேர்ப்பருவம் என்பது குழந்தையின் பத்தொன்பதாவது மாதத்தில் (19–21 மாதம் என்றும் சொல்வர்) பாடப்படுவது. குழந்தை களிமண், ஓலை, பலகை, சிறுகாய்கள் போன்றவற்றில் பல அடுக்குத் தேர் செய்து அதை உருட்டி இழுத்து விளையாடி மகிழ்வது பாடப்படும். சிறுதேர் உருட்டி வருக எனப்பாடுவர். நம் ஆசிரியர் தனது புலமையையும் ஆற்றலையும் இப்பருவத்தைப் பாடும்போது பலவாறாய் வெளிக்கொணர்கிறார். அகமும் புறமும் பிறர்வாழ விழையும் மனிதர்கள் இருப்பதால் இந்த உலகம் நிலைபெற்றிருக்கிறது என்ற ஆன்மீக உண்மையைப் பேசுகிறார் (பா. 10:1,2,3) தீதகன்று நன்மை பெருகிடவும், இருளகன்று ஒளி தோன்றிடவும், வறட்சி நீங்கி வளம் பெருகிடவும் நாயகனை சிறுதேர் உருட்டி அருள்க என வேண்டி நிற்கிறார்.

பள்ளி எழுச்சி

ஆசிரியர் பிள்ளைத்தமிழ்பாடிய தன் பாட்டுடைத் தலைவனை திருப்பள்ளி எழுந்தருளப் பள்ளி எழுச்சிப் பாடுகிறார். பொதுவாக ஒருவரையோ (நாட்டைக்கூட) சோம்பிய நிலையில் தளர்ந்த நிலையில் உணராததுபோல் இருக்கும் நிலையிலிருந்து விழித்தெழுந்து விடுபட்டு உலகோர் உய்ய நல்லன செய்யப் பணித்துப் பள்ளிஎழுச்சிப் பாடுவதுண்டு. தூங்குவது போல் தூங்குதல் பேசப்படும். விழித்தெழ வேண்டி பாடப்படும்.

கவிஞர் தமிழ்க்குழவி அவர்கள் பிள்ளைத்தமிழின் நாயகரையே பள்ளி எழுச்சிக்கும் பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு பாடுகிறார்.

அருணன் உதித்தனன் அம்புஜம் விண்டது அளிகளும் மொய்த்தன பாராய் அம்மா நீ எழுந்தோடிவாராய் என்ற கவிமணியின் வரிகள் என் நினைவிற்கு வருகின்றன. தூங்குபவன் படுக்கையே கதி என்றுகிடந்தால் அப்படுக்கையே அவனுக்கு

ஏமனாகும் என்றும் வைகறையில் எழாதான் ஒருகரையும் காணான் என்றும் சொல்வதுண்டு. கவிமணி சொன்னது போல நம் கவிஞரும் விண்ணில் பரிதி விழித்தது, கதிர்கள் வியன்புல அரங்கில் விரிந்து பரந்தன (பா.1) என்று தொடங்குகிறார்.

ஏற்றதாழ்வற்ற, சகலரும் ஒன்றெனப்போற்றும் சாதி பேதமற்ற சமுதாயம் காண விழைகிறார் (பா. 2,3,4). அறமே வாழ்வின் அடித்தளமென்றுரைத்து, பாசப்பிணைப்பு அறுத்து, பசுவெனும் ஆன்மா சிறகுகள் விரித்து நிற்க, மனம் அந்தக்கரணங்கள் மலங்கள் மாயை இவற்றினின்று விடுபட்டு உலகம் உய்ய வேண்டி கண்காக்கும் இமைதிறந்து விழித்திட வேண்டிப் பாடுகிறார் (பா 6,7,9,10) நிலையாயாக்கையை பொருட்டாக்காது ஒளிரும் தீபமென வெளிவழிகாட்டிய நீ முடங்கித்துயிலுதல் முறையோ என்றுரைத்துப் (பா 11) பள்ளி எழுந்தருளப் பணிகிறார். நாயகன் நிகழ்த்திய அற்புதங்களைப்பாடி உலகுய்ய எழுந்தருள வேண்டுகிறார் கவிஞர் (பா. 21,22). உள்ளீடற்ற வெங்காயம் ஒத்த இவ்வுலக வாழ்க்கையின் பற்றுவிட்டு நிலையாமை உணர்ந்து விஷய ஞானம் விட்டு வீடுபெற வேண்டித்தத்துவங்கள் பல தந்தவனே நீ துயில் நீங்காயோ துயர் துடைப்பாயோ என விண்ணப்பிக்கிறார். யாதும் ஊரே யாவரும் கேளிர் எனக்கண்ட ஞானச்சிகரமாம் சந்திரசேகர பாரதியைத் துயில் நீக்கி உலகுய்யப் பெருநெறி உரைத்திடப் பள்ளிஎழுந்தருளப் பணிந்து வேண்டுகிறார்.

விருப்ப அந்தாதிப் பாடல்களில் சந்திரசேகர பாரதி சுவாமிகளையும், அவரைத்தமக்கு அறிவித்தருளிய ஸ்ரீ வித்யாசங்கர சரஸ்வதி சுவாமிகளையும் உவந்துபாடி, உலகத்திறங்கள் உலராது காத்து நிற்க வேண்டி தம் விருப்பை கவிஞர் வெளியிடுகிறார். இறுதியாக தன்னை இவ்வரும் பணிக்கு ஆட்படுத்திய ஸ்ரீ வித்யாசங்கர சரஸ்வதி சுவாமிகளுக்கு நெஞ்சுநிறை நன்றியுடன் நூலை முடிக்கிறார்.

முறையாகத் தமிழ் கற்காவிடினும் தமிழுக்குத் தொண்டு செய்த பிறதுறைச் சான்றோர்களில் நமது கவிஞர் தமிழ்க்குழவியையும் ஒருவராகப் போற்றிக்கூறுவதில் மகிழ்ச்சியடைகிறேன். அவரது படைப்புகள் படிப்பவர் மனதில் ஆன்மிக உணர்வினை ஊட்டி, உலகியலை உணர்த்தி, ஒப்பிலா உவகை எய்திடச் செய்யும் என்பதில் ஐயமில்லை. தொடர்க நம் தமிழ்க்குழவியின் தமிழ்ப்பணி என வாழ்த்துகிறேன்.

10-10-2013 பேரா. **மு. பத்மநாபபிள்ளை**

# ஆசிரியர் உரை

"சேதமில்லாத இந்துஸ்தானம் – அதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா"

என்பது மகாகவி பாரதியார் பாடல். மண்ணும் மலையும் மணிநீரும் காடும் பொன்னும் பொருள்வளமும் பொலிந்து சிறந்தது நம் பாரதநாடு. இவையே தான் இத்தேசத்தின் நிறைவா? இந்திய பூமியின் பெருமை அதன் இறையாண்மை! உலகமே உற்றுநோக்கி வியந்து பாராட்டும் ஆன்ம பலம்! தன்னையே பிரபஞ்சத்திலும், பிரபஞ்சத்தையே தன்னிலும் கண்டு மகிழ்ந்து களிகூரும் காருண்யசீலம். சீவனே சிவமாக – சீவமுத்தி பெற்றவர்களின் ஆன்ம அதிர்வலைகள் பாரதபூமியெங்கும் பரந்துவிரிந்திருக்கிறது.

ஸ்ரீ ஆதிசங்கரர் அறிதற் கொண்ணாத ஆன்ம ஞானி. அவருக்கு முன்னும் பின்னும் இங்கே ஆயிரமாயிரமாய் அருளாளர்கள். அவர்களைப் போற்றுவது, இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டாரின் பெருமைகளைப் பேசுவது எம்போன்றோர்க்கு வாழ்வை முன்னெடுத்துச் செல்வதற்கு முதற்படி. அவ்வகையிலே அவர்களைப் பாடுவது அவர்களுக்குள்ளாகவே என்னை ஐக்கியமாக்கிக் கொள்வது எம் வாழ்வியல் அவா,

"அவா என்பது எல்லார்க்கும் எஞ்ஞான்றும்
தவா அப்பிறப்பீனும் வித்து" . . . (குறள் 361)

அதற்காகவே நான் மேலும் மேலும் பிறப்பெடுக்க விழைகிறேன். இப்பிரபஞ்சம் உள்ள வரையில் பீடுறு இப்பெருமான்களின் பெருமைகளைப் பேசிக்கொண்டேயிருக்க வேண்டும்.

அருளாளர்களுக்கு அன்னையாகப் பாவித்துக் கொள்வதில் எனக்கொரு தனிசுகம். அவர்களைக் குழந்தையாகப் பாவித்து இருபத்தொரு மாதங்கள் கொஞ்சி மகிழ்தலில், குறையிரந்து வேண்டுதலில் எனதான்மா இக்குவலயமே தன் மடியில் தவழ்வதாக உணர்கிறது. பரிதியை ஒரு பனித்துளி காட்டுவது போல்தான் என் பாடல்கள். ஆனால் அவற்றிற்கு ஆத்மார்த்தமான ஓர்

அனுபவப் பிழிவும், ஆன்மிக ஞானிகளின் அருட்பொழிவும் சுவை சேர்க்கின்றன.

ஸ்ரீ சதாசிவப் பிரமேந்திராள், யோகிராம் சுரத்குமார், பகவான் ஸ்ரீ சீரடி சாய்பாபா, மகரிஷி ரமணர் இவர்களைப் பாடியதைத் தொடர்ந்து இங்கே இந்நூல் சிருங்கேரி சாரதா பீடத்தின் 34–வது பீடாதிபதி மகாகுரு ஸ்ரீ சந்திரசேகர பாரதி மஹா ஸ்வாமிகளின் மகிமைகளை பிள்ளைத்தமிழில் பாடுகிறது. அவரைத்தன் இதயத்தில் சுமந்து அவரையே தன் பிராணனாகக் கொண்டு அருள்நலம் சான்றவராக நெருவூரில் குடிகொண்ட ஸ்ரீ வித்யாசங்கர சுவாமிகள் அடியேனுக்கிட்ட கட்டளையை அவரருளாலேய இங்கே நிறைவேற்றச் செய்து என்மனம் மகிழ்கிறது. இதுவென் வாழ்வில் கிட்டிய பெரும் பேறு.

சுவாமிகள் ஆணைப்படி இந்நூலை வெளியிடுவதற்கு முன்வந்த ஸ்ரீவித்யா ந்ருஸிம்ம ஆஸ்ரம ஸ்ரீ ஹரிஹர சேவா டிரஸ்ட் மெய்யன்பர்களுக்கும் இந்நூலுக்கொரு ஆய்வுரை வழங்கி மகிழ்ந்த அண்ணா கல்லூரி முன்னாள் முதல்வர் எம் ஆசிரியப் பெருந்தகை பேராசிரியர் திரு. மு. பத்மநாபன் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கிய குமரிமாவட்டச் செந்தமிழ் அருள்நெறிப் பேரவை நிறுவனர் புலவர் வே. இராமசாமி அவர்களுக்கும் முகப்பட்டை வடிவமைத்த நண்பர் பப்பு, அச்சாக்கம் செய்து தந்த செல்வி சுனிதா மற்றும் கரூர் திரு. இராமசாமி, திரு. ஸ்ரீதர் உட்பட துணைநின்ற நண்பர்கள் அத்தனைபேருக்கும் எல்லாவற்றிற்கும் மேலாக அடியேனை இவ்வரும் அருட் பணிக்கு ஆட்படுத்திய சுவாமி அவர்களுக்கும் ஆயுட்பரியந்த நன்றி.

“என்னால் இங்கே ஆவதொன் றில்லை
எல்லாம் இறையருள், இஃதென் பேறே”

நாகர்கோவில்–2 — நன்றியுடன்

02–02–2014 — **கவிஞர் தமிழ்க்குழவி**

குறளகம், கீழராமன்புதூர்

## மகாகுரு
## ஸ்ரீ சந்திரசேகர பாரதி
## மஹா ஸ்வாமிகள்



## திருவடிகள் போற்றி போற்றி . . .

## இறைவணக்கம்

அன்னையைத் தந்தையை ஆசானை என்றுமுள
இன்னருட் தெய்வத்தை இன்தமிழைச் – சென்னிமிகத்
தாழ்ந்து வணங்குவன் தப்பாமல் என்கவியில்
சூழ்ந்து மணக்கட்டும் சொல்!

# அருள்வேட்டல்

அன்னை சாரதா அரவிந் தச்சீர்
அடிகள் தொழுகின்றேன்
அருள்விழி யாலே அம்புவி காக்கும்
ஆற்றலைப் பணிகின்றேன்
என்னைப் படைத்தித் தமிழையும் தந்தனள்
எத்தனை பேரன்பு
எழுதப் பணிந்தென் இதயத் தமர்ந்தனள்
என்னே கழிவிரக்கம்!
முன்னை வினையின் பயனோ என்னுள்
முத்தமிழ் நடக்கிறது
முறுவல் பூக்கும் அன்னையின் முருகே
முன்னின் றசைகிறது
கன்னற் கரும்பே கதியே பதமலர்
காட்டுதி அடிவீழ்வேன்
கவிகள் எடுத்துக் கதிர்போல் எழுந்து
காசினிக் குரமிடுவேன்!

உன்னையல் லாலொரு உறவெனக் கில்லை
உருவரு வானவளே
உண்மையும் பொய்மையும் கலந்தவென் வாழ்வின்
உறுதுணை செந்தமிழே
தன்னைய றிந்தவன் சங்கர னன்று
தாரகை மாலையிட
சமயம் யாவையும் அத்வை தச்சீர்
சரத்திற் கொணர்ந்தவளே
என்னையும் ஒருவனென் றெண்ணினை யோகவி
எழுதப் பணித்துவிட்டாய்
எழுதும் போதென் இதயத் தமர்ந்தே
இயக்கத் துணிந்து விட்டாய்
என்னையே காணேன் இருள்தீர் இக்கவி
யாவும் நின்பதமே
இறையே நீயல் லால்எனக் கேதுசொல்
இங்கொரு முகவரியே!

நீயிருந் தாளும் சிருங்கே ரியிலோர்
நிமலன் நிறைஞானி
நிலவுல கேத்தி நிதமும் தொழுகிற
நியமன குருசீலன்
“தாயினும் கருணை தண்முகம் பொலிவில்
சந்திர வதனமென
தளிர்விடும் சந்திர சேகர பாரதி
சாமிகள்” இவர்பேரை
நாயினும் கடையேன் நாவில் மொழிவதை
நானிலம் ஏற்றிடுமோ?
நடுக்கம் தீர்த்தவர் “நான்மறை அறிந்த
நாவலர், நெருவூரைக்
கோயிலாய்க் கொண்ட வித்யா சங்கர
சரஸ்வதி சுவாமிகள்” நான்
குவித்தேன் கரங்கள் கோமள வல்லி
கொட்டுக கவிமழைநீ!

## காலடி போற்றி

காலடி பிறந்தவ கங்கையில் மகிழ்ந்து
காசியில் நின்றவனே
கடவுள் ஆன்மா அத்வை தச்சீர்
கருத்துரு தந்தவனே
வாலறி வாமத வகைகள் பிரித்து
வரன்முறை செய்தவனே
வடமொழி சூத்திர மகிமைகள் எளிய
வரிகளில் நெய்தவனே
நீலவி தான நிலவரை யின்கீழ்
நித்திய மானவனே
நெல்லிக் கனியால் நிறைஆன் மீக
நீட்சி பெற்றவனே
ஆலம் உண்டவன் அருளவ தாரா
ஆதி சங்கரனே
அகரத் தமிழால் அடியவன் போற்றுவன்
ஆதரித் தருளுகவே!

அன்னை சாரதா அம்பிகை பயந்த
அற்புத மைந்தன்நீ
அகண்ட பாரதத் தான்ம சொரூபம்
அனைத்திலும் நின்றாய்நீ
எண்ணம் நீர்த்திடில் எவரும் இறையெனும்
ஏற்றம் உரைத்தாய்நீ
இருண்ட புவிதனில் திரண்ட பரிதியாய்
இனிமை வளர்த்தாய்நீ
மண்ணின் மகனென வாழ்ந்தவ நீயிறை
மாதவ னவதாரம்!
மதத்திற் கன்றுநீ மறுகிய உயிர்களின்
மருத்துவ அவதானம்!
அன்னமும் செல்வமும் அனுபவ போகமும்
ஆதவ நீகணித்தாய்
அடியவன் நின்திரு அடிகள் பற்றினன்
அருள்விழி பூப்பாயோ?

அன்றுநீ கண்ட ஆலய மடங்களுள்
அற்புதம் சிருங்கேரி
அடுத்தடுத் தமைந்த மடாதி பதிகள்
அனைவரும் ஓர்நிறையே!
பொன்றா வளந்தரு புண்ணிய பூமியில்
புதுயுகம் கண்டவொரு
புனிதனைத் தம்மனப் பொற்புல லக்கில்
பொழுதும் சுமக்கின்ற
மன்ற வாசகர் மாதவ சீலர்
மகிழ்நெரு வூர்பதியின்
மன்னர் வித்யா சங்கர சரஸ்வதி
சுவாமிகள் ஒருதிருநாள்
என்னை அழைத்தெம் இறைவனைப் பாடுக
என்றார் அதிர்ந்தேன்நான்
இங்கே மலர்வன என்கவி யல்ல
யாவும் குருவருளே!

## பாட்டுடை நாயகர்

சந்திர சேகர பாரதி ஸ்வாமிகள்
பாட்டுடை நாயகரே
சதாசி வன்நினைப் பூறிய ஞானி
சாகித்யப் போதகரே
விந்தைகள் யாதும் புரிந்திலர் ஆயினென்
வேத விற்பன்னர்
விதையாம் பாரத ஆன்மீ கத்தின்
விருட்ச தரு நீழல்!
சிந்தையி லீஸ்வரச் செந்தேன் பெருகச்
சித்தர் போலிருந்தார்
சித்தும் அசித்தும் சேர்ந்தயிப் புவியில்
சிவமாய் தானிருந்தார்
எந்தை யிவரையிங் கெப்படி பாடுவன்
எல்லாம் அவனருளே
என்தமிழ் பிள்ளைத் தமிழ்அதற் கேற்ப
இழைக மொழிவளமே!

## இனிது இனிது

சீர்சிருங் கேரிமடச் செம்மாண் தலைமைகளில்
பேர்விளங்க நின்ற பெருமானே – பார்போற்றும்
முப்பத்தி நான்காம் முதல்வ உனைப்பாட
எப்போதும் இன்பம் எனக்கு!

எனக்குத் துணையாய் இருப்பார் நெருவூர்
வணங்கற் குரியசீர் வாசர் – கனிந்தவர்தாள்
வைப்பனிந் நூலையே வாழ்த்தி மகிழ்வாரேல்
இப்புவி ஏற்கும் இனிது!

இனிதினிது ஈண்டிங் கிசையுமிப் பாடல்
கனிவுடன் ஓர்ந்து கனிந்து – புனிதராய்
மாறுமின் வையத்தீர், மாதேவன் தம்புகழே
ஊறட்டும் நெஞ்சக ஊற்று!



# ஜகத்குரு
# ஸ்ரீ சந்திரசேகர பாரதி
# மஹா ஸ்வாமிகள்
# வாழ்வோவியம்

# அவதாரம்

1. அழகிய மலைகள் அரணாக
அமுதத் தென்றல் மொழியாக
இழையும் துங்கை நதிதீரம்
இயற்கை அன்னை தாலாட்ட
தழையும் பசுமை செழிப்போடு
தானம் தர்மம் கொழிக்கின்ற
எழில்சேர் திருப்பதி சிருங்கேரி
இறையாண் மைச்சீர் அருள்நிலையம்!

2. வேதம் பலவும் கற்றுணர்ந்த
வித்தகர் ஆன்ம விதைதூவி
ஓதும் கல்வி முறைசெய்த
உத்தமர் உலகில் மெய்ஞ்ஞானச்
சாதனை புரிந்து தமைவென்ற
தத்துவப் போதகர் சனாதன
ஆதி சங்கரர் அங்கேதான்
அமர்ந்து சிறந்தனர் பல்லாண்டு!

3. அன்னை தேவி சாரதாம்பாள்
ஆலயம், சுற்றிலும் ஆசாரம்
கண்ணின் மணியாய்க் காக்கின்ற
கடவுட் கொள்கை அந்தணர்கள்!
புண்ணிய பூமி இஃதென்று
புத்தேள் உலகும் தொழஅங்கே
மண்ணின் மகிமைக் கொருகுடும்பம்
மாதேஸ் வரன்சீர் மகிழ்கூடம்!

4. கோபால் சாஸ்திரி லட்சம்மா
குணக்குன் றான தம்பதியர்
கோபாக் கினியோ வினைப் பயனின்
கொடுமை யோவினை அறிகில்லார்
தீபா ராதனைச் சுடர்எழிலாய்த்
திகழ்ந்தென்? அணைக்கப் படுதல்போல்
பாபம், பதினொரு குழந்தைகள்
பாரில் பிறந்துபின் மாண்டார்கள்!

5. வேதனை நெஞ்சை அழுத்தியது
விடிவு கருதி ஆச்சார்யப்
போதகர் தொழுதவர் புலம்பியழ
புனிதர் புகல்வார் மகப்பேறு
சாதக மாகும் கோகர்ணத்
தலம்சென் றீசன் தாள்பணியின்
ஆதர வாயிவ் வுரைகேட்டோர்க்(கு)
அப்பொழு தேசுகம் மேவியது!

6. அன்னை சாரதா பார்வையிலே
ஆச்சார் யாரை வணங்கிவிட்டு
துன்னும் இதயத் துணிவோடு
தொடர்ந்தனர் பயணம், மேன்மைகளே
மன்னும் சிவத்தலம் கோகர்ணம்
மகாப லீசுரர் சன்னிதியில்
எண்ணக் கனவுகள் பலித்தன;ஆம்
இலட்சம் மாவும் கருவுற்றார்!

7. மகத்தில் சிம்ம ராசியிலே
மைந்தன் பிறந்தான் குழந்தைதன்
தகத்த காயப் பொன்மேனி
தாமரை வதனம் கண்டவர்கள்
இகபரம் ஆளப் பிறந்தவனோ
இம்மக வென்று வாழ்த்துரைக்க
மிகமிக மகிழ்ந்தவர் ஆச்சார்யாள்
மெய்ந்நிலை அவரே அறிந்திருந்தார்!

8. நாமம் சூட்டினார் "நரசிம்மா"
நட்சத் திரப்பலன் உடனொப்ப
ஏமப் புணையாய்க் குடும்பத்திற்
கெல்லாம் ஆன இறைவன்பேர்!
தாமே வளர்ந்த குழந்தைக்கோ
தரணி மீது பற்றில்லை
சேமம் உலகிற் கியாதென்னும்
சிந்தனை இருந்தது செழிப்பாக!

9. விண்டு ணர்ந்த ஆச்சார்யாள்
வேத மைந்தன் தனைமடத்தின்
"கண்ட சாஸ்திரி" இல்லத்தில்
கலைகள் கற்று வளர்கவென
கொண்ட பெருமை தாளவில்லை
குடும்பத் தவரும் மகிழ்ந்திருக்க
வண்டு மலர்பால் வதிதல்போல்
வாசவன் ஞானம் முகிழ்த்திருந்தார்!

10. விளையாட் டில்லை பிறரோடு
வீண்வி வாதம் செருக்கில்லை
தனையாட் கொளும்புன் பற்றில்லை
தாமரை யிலைமேல் நீர்போல
முளையாய் இருந்த பருவத்தே
மோகனன் இருக்க நெஞ்சமெலாம்
விழைவா யிருந்தவ் வூர்கோயில்
வித்யா சங்கரர் முகப்போலிவே!

# பட்டாபிஷேகம்

11. அகவை எட்டில் பிரம்மோப தேசம்
ஆரிய மொழியில் திறம்படு ஞானம்
முகபஞ் சஸ்துதி பாரா யணமும்
முழுரா மாயண மொழியின் அழகும்
தகவாய்த் தங்கின மனதில் அய்யன்
தன்னை அடக்கும் மந்திர ஜெபத்துடன்
மிகையாய் ஒளிர்ந்தனன் மேனியில் சூரிய
மேன்மை தழைத்தது மெய்ந்நிலை யோகம்!

12. சாரதா பீட ஆணைக் கிணங்க
"சத்வித் யாசஞ் சீவினி" பள்ளியில்
ஆரம்ப காலப் பாடப் பயிற்சி
ஆங்கிலம் ஆரியம் அனைத்திலும் முதன்மை!
நேரம் கருதா நினைவுகள் யாவிலும்
நீல கண்டனின் நிறைந்த தரிசன
ஆரா தனைகள், அறிவா னந்த
ஆன்ம விடியல் அருளின் பொலிவு!

13. ஆச்சர் யக்குறி அல்ல இறைவனை
அடையா ளம்கண் டருளின் போத
நீட்சிகள் பெற்ற நிறைமாண் செல்வர்
நித்தமும் வளர்ந்து நிலவாய் ஒளிர
ஆச்சார் யாவின் பாதுகை போற்றி
அனுதினம் அதற்கே அர்ச்சனை செய்ய
மோட்ச புரிகளும் முன்னே தெரிந்தன
மூவுல கும்அவர் மொழியில் மயங்கின!

14. பண்டித னாகியும் பரம்பொருள் ஞானப்
பான்மையில் மேலும் பதிந்திடக் கருதி
பங்களூர் சென்றனர் அன்னையும் உடனே
பாலனுக் கினிய துணையாய் ஏகினர்!
கங்கா தேஸ்வரர் ஆலயம் மற்றும்
கால பைரவர் சன்னதி இவற்றால்
மங்கா ஞான தீட்சை கிடைத்தது
மைந்தன் திறம்பா மாதவன் ஆனார்!

15. மண்புவி நீத்து மகாசு வாமி
மாதே வன்திரு மலரடி ஏகச்
சின்னாள் இருக்கையில் அய்யன் இவரைச்
சீருடன் அழைத்துத் திருவிழி நோக்கி
மன்னும் ஞான தீக்கை நல்க
மலர்ந்தசன் யாசம் மகிமை சேர்க்க
எண்ணம் கனிந்தது, சாரதா பீடத்
தேற்றநல் தலைமை இனிதே வாய்த்தது!

16. அன்னையின் ஒப்புதல் அருள்சீ ராக
ஆதவ குருவின் அற்புத ஒளியுடன்
மன்னவர் அந்நாள் மைசூர் உடையார்
மனமும் உவக்க மங்கலப் பெருக்குடன்
சன்னதி அமர்த்திச் சாரதா பீடச்
சற்குரு வாக்கினர், சகமுய் விக்கச்
சன்யா சத்தின் தவப்பெரும் சீலர்
சந்திர சேகர பாரதி ஆனார்!

17. சாரதா வர்ணக் கவிமலர் மாலை
சந்திர மௌலீஸ் வரர்தோத் திரங்கள்
ஆரா தனைக்கு தட்சணா மூர்த்தி
அபிஷே கப்பண் மந்திர மாலிகா
சீரார் குருராஜ் சுத்தநூற் கதம்பம்
செழுமையில் வடமொழி தித்தித் தினிக்க
ஏரார் இசையோ(டு) இறைமகன் நாவில்
இழைந்து மலர்ந்தன யாவுமற் புதங்கள்!

18. விவேக சூடா மணிக்கு விளக்கம்
விதவித மாகத் தத்துவ விசாரம்
சிவாய நமவெனும் சிந்தனை யாண்டும்
சிவபரம் பொருளைக் காணும் திவ்யம்
அவாவென் றதனால் ஆன்ம வதனம்
அகம்பிரம் மாஸ்மி ஆன மோகனம்
அவரிவ ரென்னும் பேதம் இல்லா
ஆத்ம ஞானம்! அற்புத சொற்பதம்!

19. குருவுக் காகவோ ரழகுக் கோயில்
கொள்கையாய்க் கொண்டு கட்டி முடித்து
அருவாய் உருவாய் அமர்ந்த நாயகி
அன்னை சாரதா தேவி கோயிலும்
திருவாழ் வரங்கெனச் செம்மைசெய் தாரெண்
திசைகளும் போற்றித் திரும்பின, மக்கள்
வரவால் மகிழ்ந்தது சாரதா பீடம்
வான்புக ழுற்றது சிருங்கை பெரும்பதி!

20. சாத்திரக் கல்விச் சாலைகள் சுவாமி
சற்குரு வாகிச் சங்கைகள் தீர்த்த
மாத்திறம் கண்டு மகிழ்ந்த மாணவர்
மண்ணில் பலபேர் மாதவ ராகிப்
பாத்திறம் பெற்றனர் பண்டிதர் ஆயினர்
பரம்பொரு ளொன்றும் பாதைகள் ஓர்ந்தனர்
"ஆத்ம வித்யா விலாசம்" ஒன்றே
அய்யநம் சுவாமியின் அளப்பரும் பொக்கிஷம்!

21. அன்னை சாரதா அருள்பா லிக்க
ஆரம்ப மானது திக்விஜயம்
மன்னர் உடையார் மகிழ்மை சூரில்
மங்கலத் துவக்கம் குதூகலம்!
தன்குரு வுக்கொரு ஆலயம் மற்றும்
தருமக் கல்வித் தாபனங்கள்
பண்ணரும் ஞானம் பயில்கவென் றையன்
பதியம் வைத்தார் ஆன்மீகம்!

22. சத்திய மங்கலம் தமிழ்நாட் டின்கண்
சாமி முதலடி பதித்ததலம்
புத்தம் புதியப் பூந்தமிழ் உரையில்
பொன்போல் ஒளிர்ந்தது விசித்திரமே!
சத்தியம் துலங்க சாதுர் மாஷ்யம்
சார்ந்தது கோபிப் பெருநகரில்
நித்திய மங்கே நிகழ்வரங் கங்கள்
நிறைஞா னச்சீர் பொங்கல்கள்!

23. அரங்கப் பெருமாள் பள்ளி கொண்ட
அழகுத் திருநகர் திருவரங்கம்
மருந்தியல் தாயாய் இறைவன் தோன்றி
மகிழ்ந்த திருச்சி மாநகரம்
பொருந்தி மன்னர் புகழறம் காத்தப்
புதுகை என்னும் புதுக்கோட்டை
விருந்தினர் மகிழும் செட்டி நாடென
விரிந்து பரந்தது திக்விஜயம்!

24. மழையின் மையால் வறட்சி தமிழக
மக்கள் மனதில் மகிழ்வில்லை
நிழலை ஈந்த மரங்கள் கூட
நெருப்பாம் வெயிலில் கருகிநிற்க
நிலைமை கண்டு நெகிழ்ந்த சுவாமிகள்
நெஞ்சில் கருணை, விராடபர்வ
இழைகள் ஓதி வருண ஜெபமும்
இசைத்தனர் பெய்தது பெருமழையே!

25. என்னே கருணை என்னே ஆற்றல்
யாவரும் வியந்து தொழுதிடவே
குன்றக் குடியில் தங்கி சுவாமிகள்
குளிர்வித் தாரித் தமிழ்நாட்டை!
தென்முகம் நோக்கிய பயணத் தில்பின்
திருவடி பதித்தது மதுரைநகர்
அந்நகர் வருமுன் ராமேஸ் வரத்தில்
அருளுரை பற்பல ஆற்றி நின்றார்!

26. திருநெல் வேலி பாப நாசம்
திருச்செந் தூரில் வலம்வந்து
ஒருமூன் றாண்டுகள் ஊர்வலம் பவனி
ஒவ்வோ ரூரிலும் சத்சங்கம்!
வருண ஜெபங்கள் மழைபெய்விக்க
வகைவகை யான பூஜைகள்
திருவும் பொலிவும் பெற்றுத் திகழ்ந்ததித்
தேன்தமிழ் நாடந் நாட்களிலே!

27. கன்னியா குமரிக் கடுத்த பயணம்
கடவுள் மறுப்புக் கொள்கையரும்
சன்னியா சித்தவ சீலம் கண்டு
தனிமரி யாதை தந்தார்கள்!
அந்நாள் அனந்தை மகாரா ஜாவும்
அளப்படும் பக்தி பூண்டதனால்
பொன்னார் திருவடி போற்றிப் பணிந்தார்
போமிட மெல்லாம் ஆன்மலயம்!

28. காலடி சென்றதும் சுவாமிகள் தமது
காலணி களையும் கழற்றிவிட்டார்
சாலைகள் திறந்து சாத்திரம் பயிற்ற
சங்கர ஜெயந்தி விழாவெடுத்தார்!
பாலகாட் திருச்சூர் கொச்சின் கோவை
பற்பல ஊரிலும் தாம்கண்ட
ஆலயம் தோறும் வழிபா டியற்றி
அடுத்தே கினரே நஞ்சன்கூட்!

29. சங்கரத் திருமடம் தாபித் தங்கு
சானகி ராமன் சிலைவைத்தார்
மங்கல வேதம் பயில்வதற் காக
மகிழ்வாய் அங்கொரு பள்ளிகண்டார்
தங்கியத் தலமெது வாயினு மங்கு
தர்மம் தழைக்க நிலைகொண்டார்
பொங்கிய ஞானம் புண்ணிய பூமியில்
புத்துயி ரோடு பொலிந்ததுவே!

30. வெற்றி விஜயம் முடிந்தது சாமி
மீண்டனர் புனித சிருங்கேரி
அற்றது பற்றென ஆன்மானு பூதியில்
அமர்ந்தனர், மடத்திற் கடுத்ததுயார்?
பெற்றதிப் பீடம் குருவென அபிநவ
வித்யா தீர்த்த சுவாமிகளை
கொற்றவ னிவரோ கொஞ்சம் கொஞ்சமாய்க்
குறைத்துக் கொண்டனர் தொடர்புகளை!

## நந்தவனம்

31. நரசிம்ம வனமென்னும் நந்த வனமொன்றில்
நாதன் தனித்திருந்தார்
வரவென்ன செலவென்ன வகையேதும் அறியாமல்
வாழ்வை வெறுத்திருந்தார்
பரமோன நிலைதன்னில் பட்டுப் புழுபோல
பக்திச் சிறையிருந்தார்
உறவான பீடத்தில் உள்ளவர்கள் இவருக்கு
உன்மத்தம் என்றுரைத்தார்!

32. அறிவான நிலைதாண்டி ஆனந்த தரிசனத்தில்
அய்யன்கண் பதித்துவிட்டார்
அறிவாரோ மற்றவர்கள் அஞ்ஞாத வாசமென்றும்
அயர்வென்றும் பேசிநின்றார்
பொறியாவும் வென்றபிரான் சிவமாகிச் சிலவேளை
நடனங்கள் புரிந்ததுண்டு
புரியாதார் பிணிஎன்று புகழ்மிக்க மருந்துவரைப்
போக்கறியப் பணித்ததுண்டு!

33. மீண்டுமொரு யாத்திரையை மேன்மையுடன் தொடங்கலுற்றார்
மைசூர் மாநகர்க்கு
நீண்டுமனம் மைசூரில் நிற்கவில்லை திருவாங்கூர்
நெடும்பயணத் தார்வமுற்றார்!
மாண்டவறக் காலடியில் மகிழ்பூர்ணா நதியோரம்
மனம்மயங்கி நிற்கலுற்றார்
ஆண்டுறைந்த மக்களெலாம் அய்யன்சீர் அறிந்தவர்கள்
ஆராதித் தின்பமுற்றார்!

34. பத்துமாத காலங்கள் பாதுகையே அணியாமல்
பாதைகளில் நடந்துவந்தார்
முத்துரதப் பல்லக்கும் முன்மொழிவும் தவிர்த்தவராய்
முதுமையையும் கடந்து நின்றார்
சத்துவமா ராஜசமா தாமசமா குணம்மூன்றும்
தனித்தனியே வீழக்கண்டார்
வித்தகங்கள் வேர்விட்ட வேதாந்த மாமரமாய்
வியனுலகே வாழ்த்த நின்றார்!

35. [illegible]
மெய்தவத்தால் திரும்பலுற்றார்
ஆண்டப்போ தறுபதென அடியார்கள் விழாவெடுத்தங்(கு)
ஆரவாரித் தாா்ப்ப ரித்தாா்!
யாண்டும்எப் போதும்மனம் இன்பத்தில் திளைத்திருக்க
எல்லோர்க்கும் ஆசி தந்தார்
வேண்டுதல்வேண் டாமையிலான் விழிக்கருணை நீர்பருக
விழைந்துபலா் கூடி நின்றாா்!

36. அரசியலில் சமுதாய அந்தஸ்தில் உள்ளவர்கள்
அடுத்தடுத்து வந்துசென்றார்
பரசிவத்தின் மோனத்தில் பதிந்தவரோ யாவர்க்கும்
பார்வையிலே ஆசிதந்தார்
வருவதுயார் போவதுயார் வார்த்தைகளால் பயனென்ன
வாசனைகள் உதறிவிட்டார்
கருமுகிலோ வானத்தில் கலைகின்ற காலத்தில்
காட்சிக்கெப் படிதான் தோன்றும்?

37. உடம்பெதற்கு என்றொருநாள் உள்ளுணர்வு கூறியதும்
உதிர்த்துவிடத் துணிவுகொண்டார்
தடம்பதித்த துங்கைநதி தாயவள்தன் மடிதனிலே
தனைநீக்கும் அறிவு கொண்டார்
விடியும்முன் அவண்சென்று பத்மாச னத்தமர்ந்து
விடுதலையைத் தேடிக் கொண்டார்
முடியாத ஒரு ஜனனம் முடிவுக்கு வந்ததன்று
முக்திநிலை வேறெஃதாகும்!

38. வாழிவாழி வாழியென்று வாழ்த்துரைத்துப் பாடுவமே
வந்தனங்கள் கோடி அய்யா
தாழருஞ்ச டைதாங்கும் சங்கரனின் தாள்களேதான்
சாசுவதம் ஆக்கி னாயோ?
ஆழிபடும் அரங்கன்போல் அய்யன்நீ மீண்டுமொரு
அவதாரம் எடுப்பதென்று?
ஏழையெனக் காத்திங்கே இருக்கின்றேன் சிருங்கேரி
என்றுவர வாய்க்குமாமோ?



# ஜகத்குரு
# ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி
# மஹா ஸ்வாமிகள்
# பிள்ளைத் தமிழ்

# பிள்ளைத் தமிழ்

பிள்ளைத் தமிழ் என்பது தமிழின் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. பாட்டுடைத் தலைவனையோ, தலைவியையோ குழந்தையாகப் பாவித்து பத்துப் பாடல்கள் வீதம் நூறு பாடல்கள் பாடப்பெறுவது. ஒட்டக் கூத்தரின் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழ் பிள்ளைத் தமிழ் நூல்களில் முதல்நூல், திவ்யப்பிரபந்தத்தில் பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாக எண்ணி பாடிய பாடல்கள் உள்ளன. பிள்ளைத் தமிழ் இலக்கியங்களுள் சிறந்ததாகக் கருதப்படுவது குமரகுருபரர் எழுதிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். பிள்ளைத் தமிழ் நூலில் ஆண்பால் பெண்பால் பருவங்கள் வேறுபடுகின்றன. மூன்றாம் திங்கள் முதல் இருபத்தோராம் திங்கள் வரை பிள்ளைத் தமிழ் பாடுதல் மரபு.

ஆண்பால் பிள்ளைத் தமிழ் பருவங்களாவன

1. காப்புப் பருவம்
2. செங்கீரைப் பருவம்
3. தாலப் பருவம்
4. சப்பாணிப் பருவம்
5. முத்தப் பருவம்
6. வருகைப் பருவம்
7. அம்புலிப் பருவம்
8. சிற்றில் பருவம்
9. சிறுபறைப் பருவம்
10. சிறுதேர்ப் பருவம்

******

# காப்புப் பருவம்

## காப்புக்கடவுள் – தென்னாடுடைய சிவன்

1.1 அன்னை தந்தை அறிவார் குருவென
அனைத்தும் நீயானாய்
அமிழ்தத் தமிழின் சுவையும் பொருளும்
அழகும் நீயானாய்
அண்ணா மலையின் தீபச் சுடராய்
அகத்தின் ஒளியானாய்
ஆகா யத்தில் சுழலும் கோள்களுக்
ககண்ட வெளியானாய்
தெண்ணீர் கங்கை திருமுடி தாங்கி
ஜீவித உயிர்ப்பானாய்
தேவா ரப்பண் திருவா சகத்தில்
தேனின் சுவையானாய்
தென்னா டுடைய சிவனே போற்றி
சிருங்கே ரிப்பதியில்
சேயொன் றவதரித் ததுநர சிம்மன்
சிவம்நீ காப்பாயே!

1.2 மக்களுக் காக மக்கட் பணிசெய
மக்கள் உடனேயே
மதுரை வீதியில் மண்சுமந் தனையோ
மாதவ போற்றுகிறேன்
சொக்க நீயேன் சுந்தரர்க் காகச்
சுடுமணல் தெருநடந்தாய்
தோழமை உணர்வு சுவர்க்கம் நல்கும்
சுகத்தை உணர்த்திடவோ?
வெக்கைப் பிணியேன் வேந்தனுக் களித்தனை
விரும்பிட வைப்பதற்கோ
வேலவ னிடத்தென் பாடம் கற்றனை
வித்தக மகிமைக்கோ?
சிக்கெனப் பிடித்தேன் சிருங்கே ரியிலோர்
செல்வம் பிறந்ததின்று
சேய்நர சிம்மன் திருப்புகழ் பாட
சிவம்நீ காப்பாயே!

1.3. அயனும் மாலும் ஆர்பெரி யாரென
அகந்தையி னால்துள்ள
அடிமுடி தெரியா தாகாய மகழ்நிலம்
ஆர்த்திட நின்றவனே
கயல்விழி மாது மதுரையில் தோன்றி
கடுந்தவம் செய்தனளோ
கருணைகொண் டேற்று காதலின் ஆழம்
காசினிக் குணர்த்தினைகொல்!
முயல்தவ சீலர் மோகம் அறுத்து
முப்புர மெரித்தவனே
முத்தமிழ்ச் சுவைநக் கீரன் வியக்க
முன்னின் றோதினையோ
தயவுடை யோனே சிருங்கே ரியிலோர்
தாமரை பிறந்ததின்று
தளிர்நர சிம்மன் தகைமிக கங்கா
தரன்நீ காப்பாயே!

1.4. அன்னையே என்று புனித வதியை
அழைத்து மகிழ்ந்தவனே
ஆத்திச் சூடி அணிந்தன்(று) ஔவைக்
கருள்நிறை வூட்டியவா
திண்ணன் தந்த ஊனு முனக்குத்
தீஞ்சுவை ஆனதுவோ
சிறுத்தொண் டன்பால் என்கேட் டனைநீ
செவிகள் கைக்குதய்யா!
பண்வளர் போட்டியில் பாணன் ஆகிப்
பாண்டியைக் காத்தனையே
பசுபதி ஆகிக் கருவையின் நடுவில்
பள்ளிகொண் டமர்ந்தனையே
தென்னவ அழகுச் சிருங்கே ரியிலோர்
செல்வம் பிறந்ததின்று
சேய்நர சிம்மன் திருப்புகழ் பாட
சிவம்நீ காப்பாயே!

1.5 ஆல மரநிழல் அமர்ந்து குருவாய்
அருளுரை தருபவனே
அழகுத் திருநடம் ஆடுவை யேல்புவி
அதிர்ந்து நெகிழாதோ?
கோலத் திருமணம் குடகில் குணதிசை
குறையென் செய்ததுசொல்
குறுமுனி மட்டும் கொடுத்து வைத்தவன்
குழவியான் காணேனோ?
மூலன் உரைத்த முத்தமி ழோசை
முழுதும் நீயலவோ
முக்கண் சுடரின் மோகன தீபம்
முக்தி யளித்திடுமோ
நீல கண்ட, சிருங்கே ரியிலோர்
நித்திலம் பிறந்ததின்று
நிறைநர சிம்மனை நெகிழ்ந்திவண் பாட
நிமல காப்பாயே!

1.6 பிச்சைக் கலையும் பெரும, எங்கள்
பீடைகள் வாங்கிக்கொள்
பிள்ளைக் கறியெனக் கேட்டிவண் புவியில்
பித்தனென் றலையாதே
இச்சை கொண்டொரு பெண்மை நயந்த
இராவணர்க் கருளினைஏன்
இருத்திய விரலால் இமயம் அழுத்தியும்
இசையில் மயங்கினையோ
கச்சை கட்டிய சுடலை மாடனுன்
கண்ணில் உதித்தவனோ
கருணை கொண்டவன் காசினிக் கருளக்
கல்வி கொடுத்திலையோ?
பச்சை மரகத வல்லியின் பாகா
பதிபுகழ் சிருங்கேரி
பாலக னைப்பார் பரவி மகிழ்ந்திட
பரம காப்பாயே!

1.7 நமசி வாய மந்திர மாகி
நாத வடிவானாய்
நானார் என்னும் கேள்வியுள் தோன்றும்
ஆன்ம நிறைவானாய்
உமையா ளோடென் ஊடல் மேலும்
ஒருத்தி சடையில்ஏன்?
உந்தும் கங்கை புனலால் இந்த
உலகம் உய்ந்திடவோ?
சுமையா நிலவு? சுழல்வ தென்கொல்
சுதந்திரப் பிரியனுனைச்
சுற்றிய ஆனை முகனுக் கெப்படி
வெற்றியென் றறிவித்தாய்?
அமரர் கோவே அரனே துங்க
அழகுச் சிருங்கேரி
அமிழ்தொன் றீந்தது அதன்புகழ் பாட
அய்ய காப்பாயே!

1.8. நஞ்சுண் டவனே நாகம் அணியா
நகைவே றில்லையோ
நட்ட நடுநிசி தில்லையி லம்பலம்
நமனுன் உறவாமோ?
அஞ்சல் அறியா அப்பருக் கேன்நீ
அத்துணை துயர்கொடுத்தாய்?
அய்யா சிவசிவ என்றவை குண்டர்க்
கறிவில் ஒளிகொடுத்தாய்
பிஞ்சுக் குழந்தை சம்பந்த தர்க்குப்
பேசப் பண்கொடுத்தாய்
பெருந்துறை யமர்ந்து மணிவா சகர்பால்
பிரியம் மிகவைத்தாய்
கொஞ்சும் அழகுச் சிருங்கே ரியிலோர்
குழந்தை பிறந்ததின்று
குளிர்தமி ழெடுத்துக் கோலப் பண்தர
கூத்தா நீகாப்பு!

1.9. மொகஞ்ச தாரோ ஹரப்பா நகரிலும்
மோகன சிவலிங்கம்
முந்து கடல்கொள் முதுநிலப் பரப்பிலும்
முகிழ்த்தது சிவலிங்கம்
அகம்புறம் என்ப அருவாய் உருவாய்
அருவுரு சிவலிங்கம்
ஐம்பெரும் பூதமும் ஆகாய வெளியோ
டமைந்தது சிவலிங்கம்
யுகம்பல வாயினும் உதிரா துலகில்
உயிர்ப்பது சிவலிங்கம்
உள்ளது மில்லதும் உண்மையும் பொய்மையும்
உரியது சிவலிங்கம்
மகம்நட் சத்திர மகிமை கொழிக்க
மண்சிருங் கேரியிலே
வந்தது ஒருசேய் வாழ்த்தியிங் காட
வரம்தா, நீகாப்பு!

1.10. வேணு கானம் விரிக்கும் இசைவில்
வெண்ணுரை புனலாட
விரிகுடை நீழல் கருமுகில் மழையை
விருந்தென அமிழ்தாக்க
காணு மிடமெலாம் பசுமை சுற்றிலும்
கமல நீர்நிலைகள்
கவிபடித் தாடும் பட்டாம் பூச்சிகள்
கள்ளுண் தேன்மலர்கள்
நாணு முகத்துடன் நயந்து தும்பிகள்
நாயனம் வாசிக்க
நாத சொரூபன் நமசி வாயன்
நயந்தசு சீந்திரத்து
தாணு மாலய, தாள்கள் வணங்குவன்
தண்பொழில் சிருங்கேரி
தந்த திங்கொரு தவமே வியசீர்
குழந்தை நீகாப்பு!

## செங்கீரைப் பருவம்

2.1 தங்கவில்லை குழந்தைகள் பதினொன்றும் என்றுமனம்
தாங்கொண்ணாத் துயரத் தோடு
தவசீலர் கோபால சாஸ்திரிகள் லட்சம்மா
தலைவிதியை நொந்த வாறு
பொங்கரவத் தார்புனைந்து புனல்கங்கை சடைதரித்த
புனிதன்வாழ் பதிகள் தோறும்
புகழ்பாடித் தாள்பணிந்து பூசனைகள் பலசெய்து
பொறுதியுடன் வாழுங் காலை
செங்கமலக் சிருங்கேரி சுவாமிகள்ஆ சீர்வாதம்
சிந்தைக்கு நிறைவை நல்க
சிவப்பிரம்ம மேமகவாய் கருகொண்டு உருகொண்டு
கவல்தீரப் பிறந்த தங்கே!
திங்களென முகவதனம் சீர்பொலியும் நரசிம்ம
சேய்கண்டு களிகூ ருவோம்
செகமுய்ய வந்துதித்த செல்வபா ரதியழக
செங்கீரை ஆடி யருளே!

2.2. சிருங்கேரி மகாஸ்வாமி சீர்மிகுதம் பதியர்பால்
செய்தவோ ருடன்ப டிக்கை
செல்வமகன் வளர்ந்ததுமே சிவஞான தீட்சையுடன்
சிருங்கேரி மடத்திற் காக
அரும்பணிகள் ஆற்றதமை அர்ப்பணிக்க வேண்டுமதை
அன்னைதந்தை ஒப்புக் கொண்டார்
ஆனாலும் மனதிலொரு அற்றத்தில் சிறுநெருடல்
ஆறுதலாய்த் தேற்றிக் கொண்டார்
அரும்பெனவே முகிழ்த்தயிளம் ஆதவனும் சுவாமிகளின்
ஆதரவில் வளர்தல் நன்றோ
அம்மடத்தின் சார்பாளர் ஸ்ரீகண்ட சாஸ்திரிகள்
அகமதனில் பிள்ளை ஆகி
கரும்பெனவே வளர்கின்ற கதிரவனே நரசிம்ம
காருண்ய போற்று கின்றேன்
கண்ணன்நீ என்றிடவா, கோகுலத்து பாரதியே
செங்கீரை ஆடி யருளே!

2.3 வியாசரெனப் போற்றிடவா வசிட்டரென வாழ்த்திடவா
வேதங்கள் யாவும் தாமே
விளைகின்ற நிலமாகி வியாபகமாய் மெய்ஞ்ஞான
விதையைப்போல் நீயி ருந்தாய்
அயராத கலைகூடக் கல்வியிலும் முதல்வனென
அற்புதமாய்ப் பிரகா சித்தாய்
அன்புநிறை அறிவுநிலை ஆழ்ந்தகன்ற சமயநிலை
ஆன்மீகம் தானே ஆனாய்
முயலாமல் தவசீலம் முகிழ்த்திடுமா உனக்கதுவும்
முன்வினையால் வந்த பயனோ
முறைவைத்து இறைகண்டு முடிசூட்டி மகிழ்வதற்கு
முன்னோட்டம் வித்யா பீடம்
செயலற்ற தன்மையிலே செயலுண்டு எனப்பின்னாள்
சிவமாகப் பொலிய வந்த
தெய்வமக, நரசிம்ம பாரதியே தென்றலொடு
செங்கீரை ஆடி யருளே!

2.4 பெண்கொடுக்க விழைந்தவர்கள் எத்தனைபேர் அடடாஓ
பெம்மானுக்(கு) அதுகூ டுமோ?
பிரம்மச்சர் யம்ஒன்றே பீடுதரும் அழகாக
பிறவேட்கை ஏது மில்லை!
தண்மதிய விழிதீட்சை சத்குருவால் பெற்றவர்க்கு
சால்புநலம் தவவாழ்க் கையே.
சந்த்ரமௌ லீஸ்வரரும் சாரதாம்பாள் தாயும்தன்
தளிர்மகவுக் காட்ப டாரோ?
பண்பொழியும் கவிபாடும் பாலகனாய் பள்ளியிலே
பலர்வியக்க வாழ்ந்த செல்வ
பட்டைகூர் வைரமெனப் பளிச்சிடுமே நினதெழுத்து
பரமனெழில் அதுவே என்கோ
திண்மனதில் வைராக்யம் தெளிவான நுண்ணறிவு
தீபம்போல் ஒளிரும் அய்யா
தேன்பிலிற்று சிறுமுகைபோல் பாரதியே நரசிம்ம
செங்கீரை ஆடி யருளே!

2.5 துங்கா நதிதீரம் தொடர்மலைகள் காடுகள்சூழ்
துன்னுமெழிற் பொழில்கள் தோறும்
தூளிகட்டி ஆடுவதென் வானத்து மின்மினிகள்
துணைக்கிசையைப் பாடும் தென்றல்!
கங்கா யமுனைநதிக் கரையோர மணம்பரப்பும்
கவின்மாட ஆல யங்கள்
காவல்செய் தெய்வங்கள் கலைவாணி அருட்கோயில்
காணும்பல் கோபு ரங்கள்
எங்கெங்கே நோக்கிடினும் இறையம்சப் பக்திப்பண்
இதயமெலாம் மிகுதா ளங்கள்
இரும்புமுடன் கனிந்துவிட ஏதுவாகும் ஆன்மீக
இழைநெய்த பக்தி சூழல்
சங்கரரால் தோற்றுவித்த சாரதா பீடத்தின்
சன்னதிக்குத் துதிகள் செய்வோம்
சந்திரசே கரச்செல்வ சதுர்வேத பாரதியே
செங்கீரை ஆடி அருளே!

2.6 வேதா கமக்கல்வி வித்தகனாய் பள்ளியிலே
வெற்றிகளைக் குவித்த கோவே
வித்யாசஞ் சீவனியில் விதவிதமாய் ஆன்மீக
வேர்கள்சீர் அறிந்த தேவா
மாதா தந்தையுடன் மகாசுவாமி வாழ்த்துரைக்க
பங்களூர் சென்ற போதும்
மாதேவர் கங்காத ரேஷ்வர்தம் சன்னதியில்
மணிக்கணக்கில் நின்ற தென்கொல்?
ஆதார மானகுரு காலப்பை ரவர்முன்றில்
அளித்தாரே நயன தீட்சை
அன்றந்த சன்யாசம் ஆன்மாவி லொன்றிடவே
ஆதவனாய் ஒளிர்ந்தாய் என்கோ
தீதகற்ற வையகத்தின் தீமையற வந்துதித்த
தெய்வீக மலரே தொட்டில்
தீந்தமிழின் பண்பொதிதான், சேயான பாரதியே
செங்கீரை ஆடி அருளே!

2.7 சிந்திக்க சிந்திக்கத் தித்திக்கும் சித்திக்கும்
சிவபோத ஞானம் பெருகும்
சிற்றம்ப லத்தலைவன் சீவிதத்தை ஆட்கொள்ள
சிவஞான மோகம் பெருகும்
வந்திக்க வந்திக்க வாலறிவன் தாமாகும்
வாசகங்கள் உயிரில் தெரியும்
வர்ணங்கள் ஏதுமற வானாகி உயிராகி
வையகத்தின் மாட்சி விரியும்
மந்திக்கும் மானுக்கும் மாறுபா டில்லாத
மகிமைகள் தானே குறளின்
மனதிலிரு மையில்லா ஒருமைப்பா டுற்றநிலை
மாதொருபா கன்தம் ராஜ்யம்
செந்தணலும் பூந்தளிரும் சேர்ந்திருக்கும் இறைவடிவ
செப்பலரும் கோவே, தொட்டில்
தீந்தமிழின் பண்பொதிதான், சேயான பாரதியே
செங்கீரை ஆடி அருளே!

2.8 மகம்நட்சத் திரம்பிறந்து சிம்மராசி தனில்பொலிந்தால்
மாநிலமே ஆளு கின்ற
மகத்தான பலனுண்டு மாயைகளுள் சிக்காத
வைராக்ய மேன்மை உண்டு
தகத்தகாயப் பொன்மேனி சார்ந்தவரை உய்விக்கும்
சாமுத்ரிகா தன்மை உண்டு
சாகித்ய நிறைஞானம் சாகரமாம் கடல்நீந்தும்
தன்முனைப்பு வலிமை உண்டு
"அகம்பிரம்மாஸ் மி"என்னும் ஆன்மமெய்ஞ் ஞானசுகம்
அனுபூதி வாழ்வி லுண்டு
அரும்பும்புன் னகையொளியால் அடைவோரை ஈர்க்கின்ற
ஆகர்ச சக்தி உண்டு
செகம்வாழ அறம்பயிற்றும் சிருங்கேரி மடமதனின்
சிம்மாச னம்யார்க் குண்டச்
செல்வரிங்கு ஒருகுழந்தை, நரசிம்ம பாரதியே
செங்கீரை ஆடி அருளே!

2.9 மடாதி பதியாக மகாராஜா மனம்வைக்க
மைசூரில் பெருங்கொண் டாட்டம்
மைந்தன்நர சிம்மனுக்கு மாதேவன் கருணையினால்
மக்கள்சீர் பரவும் நாட்டம்
விடாத பற்றதனால் விரும்பும்தாய்க் காறுதலாய்
விதிவலிமை யோடு ஆன்ம
வேந்தர்தம் குருவுரையை விளக்கிப்பின் தவவாழ்வில்
வியனுலகே வியக்க வைத்த
நடராசர் சேவகனே நரசிம்ம சாஸ்திரியே
நனிபீடத் தலைமை ஏற்றாய்
நாமமினி "சந்திரசே கரபார தி" என்ப
நாவெல்லாம் மதுவின் தீண்டல்!
உடனிருந்தார் உளம்மகிழ ஓங்கார மானசிவம்
உருவாகித் திரண்ட தென்ப
ஒலிவடிவ யிளஞ்சேயே நரசிம்ம பாரதியே
செங்கீரை ஆடி அருளே!

2.10 மாயைகளுக் கேற்பமன ஒட்டங்கள் கூடாது
மாதவன்நீ கட்டுள் வைத்தாய்
மந்திரங்கள் தந்திரங்கள் மருள்கூட்டும் யந்திரங்கள்
மதியாமல் ஒதுக்கி வைத்தாய்
ஆயகலை பதினாறும் ஆய்ந்தாய்ந்து சோராமல்
ஆன்மநெறி மட்டும் கற்றாய்
ஆசுகவி தம்குருவின் அடிதொழுதே அவர்தந்த
அறங்களையே பற்றி நின்றாய்
தூயநிலை துரியநிலை தொடர்ந்திருக்க அஞ்ஞானத்
தூண்டில்களைப் புறத்தே வைத்தாய்
துலங்கும்மெய்ஞ் ஞானத்தின் தோற்றத்தில் தான்பூத்து
துலங்குபரம் பொருளே ஆனாய்
சேயெனஇங் கெனக்குற்ற சீர்சந்திர சேகரனே
சிற்றம்ப லக்கொ ழுந்தே
சிருங்கேரி மடம்தழைக்க சிவம்தந்த மாருதமே
செங்கீரை ஆடி அருளே!

## 3. தாலப் பருவம்

3.1 மலையும் காடும் மணமலர்ச் சோலையும்
மாருதத் தென்றலொடு
மகிழ்ந்து குலாவும் மங்கல பூம்பதி
மகேச சிருங்கேரி
கலையும் கல்வியும் கவிதைப் பெருக்கும்
கடலெனப் பொங்குகிற
கவின்சீர் மாடம் காவியம் புகழும்
கருணை தவழ்கூடம்
நிலையிற் திரியா தடங்கிய ஞானியர்
நித்தமும் தொடர் யாகம்
நிலைபே றருள நீநான் ஆணவம்
நீக்கிடும் இறையோகம்
தலைமைப் பண்பறம் தாங்கிட பதியின்
தவமாய் வந்தனையோ
தயாப ராநர சிம்ம பாலகா
தாலே தாலேலோ!

3.2 துங்கா நதியில் துலங்கும் மோகனம்
தொடர்தொட ராகவர
துள்ளும் மீனினத் தோற்றம் எண்ணத்
தூரிகை போலாட
சங்க ராசிவ சங்க ராசிவ
சங்க ராகீதம்
சந்தத மும்பல தாளமு ழக்குடன்
தருக்களைத் தாலாட்ட
சங்கு முகத்துடன் வண்ண மலர்க்குவை
சரங்களில் தேன்பாய
சாதக மாமுனி போதனை யால்பல
சாகித்ய நூல்ஆய
சிங்க ராசியில் செனித்த மாதவச்
செல்வ நரசிம்ம
செந்தமிழ் குறள்போல் சிரித்தனை அழகுச்
சேயே தாலேலோ!

3.3 இறைஞா னத்தில் இதயம் தோய்ந்தவர்க்
கென்றும் இன்பமயம்
இலக்கிய மோகம் எண்ணும் எழுத்தும்
இரண்டாம் பட்சம்தான்
மறைநான் குரைக்கும் மங்கலச் செய்திகள்
மனதின் முகிழ்வுகளாய்
மாறிடும் எனில்பின் மந்திர தந்திரம்
மாநிலத் தென்செய்யும்?
சிறைபட் டனனோ சிவன்சிந் தைக்குள்
சிறகுகள் அசைகிறதா
சில்லெனும் மாருதச் சீர்த்திகள் கூடுக
சீர்மிகு தமிழ்போல!
நிறைநீர் மையுடன் நித்தில மொத்த
நீல விழிகண்ணா
நேய மிகுநர சிம்ம தயாபரா
தாலே தாலேலோ!

3.4 வித்யா சங்கர ஆலயத் தில்சிவம்
விழிகளை ஈர்த்ததுவோ
விதவித மாக வழிபடு முறைகள்
வேட்கையைக் கூட்டினவோ
நித்ய தரிசனத் தால்இறை மகிழ்ந்துன்
நெஞ்சம் புகுந்தனனோ
நிறைவாய் கொண்ட நம்பிக் கையால்
நெறிகள் வளர்ந்தனவோ
முத்தி யால்பெறும் முடிவில் இன்பமும்
முளையில் தோன்றியதோ
முனைமழுங் காத முயற்சிகள் கல்வியில்
முதன்மை ஆக்கியதோ
பத்தியி னாலே பரம குருதாள்
பற்றிக் கொண்டவனே
பாலா, நரசிம்ம பாரதி பாடவோ
தாலே தாலேலோ!

3.5 இரண்டு வகுப்புகள் ஓராண் டிற்குள்
எப்படி சாத்தியமோ?
இதிகா சங்கள் யாவும் மனனம்
இதுவும் அற்புதமோ
திரண்ட முத்துக் குவியல் போல
தெளிந்த கையெழுத்து
தேனிற் குழைத்த அமுதம் போல
திரியா மொழிப்புலமை
சுரந்த கருணை சுபிட்சம் பெருக
சுருங்கி விரியும்கண்
சுற்றி யிருப்பவர் சுடரொளி காணச்
சுகமாய் மலரும்பண்
விருந்தாய் காண்பவர் விழையும் அழகு
விதைபோல் ஆனவனே
வித்தக நரசிம்ம வீணை மீட்டவோ
தாலே தாலேலோ!

3.6 பன்னிரு வயதில் பள்ளி முடித்தபின்
பயின்றது இறைகல்வி
பங்க ளூரிலும் ஆத்ம போதனை
படர்ந்தது உயர்கல்வி
எண்ணம் யாவிலும் இருந்த வேணியன்
இதயத் தமர்ந்துகொள்ள
ஏதிங் கிடரென எளிதிற் கழிந்தன
இனிதாய் நாட்களெலாம்!
கண்ணின் மணியெனக் காத்த அன்னையர்
கருத்தாய் உடனிருக்க
கால பைரவர் ஆலயச் சன்னதி
கண்களுக் கொளிவழங்க
விண்ணின் சுடரென விளைந்த கோகுல
விசையே நரசிம்ம
விழைந்தென் தொட்டிலில் விரும்பி வந்தனை
தாலே தாலேலோ!

3.7 “அகம்பிரம் மாஸ்மி” தன்னை யாரென
அறிந்துளம் வியந்தனையோ
ஆகமக் கல்வியில் ஆதியும் அந்தமும்
அறிந்தவர் யாருளரோ?
சுகமது வேசுகம் சுகப்பிரம் மம்சுகம்
சுவைசுத் தானந்தம்
சுழுமுனை நாகமும் சூக்குமம் ஏறிடில்
சுடர்பரி பூரணமே!
முகமல ரழகில் முழுமதி திகழ
முத்தியின் மோகனமோ?
முறுவலில் தெரியும் முத்தமிழ் அழகு
முருகினுக் கேதிணையோ?
தகதக வென்பத் தங்க ஒளிமிகும்
தளிரே நரசிம்ம
தரணியில் வந்ததென் தருமம் தழைக்கவோ
தாலே தாலேலோ!

3.8 மன்னர் வியந்தனர் மாதவ ராவும்
மகிழ்ந்துடன் வணங்கினரே
மைசூர் அரண்மனை மங்கலம் பொலிய
மக்களும் தொழுதனரே
சின்னவ ராயினும் சிருங்கே ரிக்குன்
சேவை உடன்தேவை
ஜெகத்குரு உனக்கிச் சிறப்பினை நல்கிச்
சிவபதம் அடைந்தனரே
தென்னகம் முழுவதும் திருவடி பதிக்கநீ
திருவுளம் கொண்டதுமென்?
தீந்தமி ழமுதத் தீஞ்சுவை உனக்கும்
தித்திப் பானதுவோ?
கன்னல் பிழிவே கருணா கரனே
கதிரே நரசிம்ம
கவிதைத் தொட்டிலில் கவினார் சேய்நீ
தாலே தாலேலோ!

3.9 தென்திசை ஆலயம் திருத்தலம் யாவும்
சேவடி தாள்பதிய
தென்திரு வாங்கூர் சிறப்பிடம் ஈந்தது
செந்தமிழ் நாட்டோடு
பொன்கனி நெல்லியிற் பொதிந்த சாரம்
பூத்தது ஓர்சரபம்
புனிதநற் பதியின் புண்ணிய வாசம்
புகுந்ததுன் உடல்வதனம்
தென்னவன் மதுரையில் திருந்திய தமிழின்
தீஞ்சுவை உண்டவனே
திருவ ணந்தையில் மன்னரும் தாள்தொழ
திருவடி பதித்தவனே
என்னநின் பெருமை எப்படி ஏத்துவன்
என்கவித் தொட்டிலிலே
இறையாய் வந்த சேய்நர சிம்ம
தாலே தாலேலோ!

3.10 நெருவூர் சதாசி வப்பிரம் மத்தை
நினைவில் ஏந்தியவா
நித்தமும் ஆத்ம விசாரம் பயின்று
நிலையாய் நீந்தியவா
திருவாழ் மார்பன் திருவரங் கத்தான்
திருவடி தொழுதனையே
திருச்சி காவிரி தேசமும் கண்டு
சிந்தை மகிழ்ந்தனையே
உருவாய் அருவாய் உயிராய் தழைத்தவன்
உணர்வோ வியம்நீயோ
ஒருமையுள் கனிந்து உண்மையில் நிலைத்த
உருவகச் சுடர்நீயோ
திருவாய் மலர்ந்தெமைத் தேற்றுதல் என்று
தேவே தாலேலோ
சேயே சந்த்திர சேகர பாரதி
தாலே தாலேலோ!

# 4. சப்பாணிப் பருவம்

4.1 மந்திரங்கள் செபிப்பதனால்
மனதிலொளி தோன்றும்
மனதிலொளி தோன்றுமெனில்
மாயயிருள் நீங்கும்
இந்திரனின் கதையறிவோம்
இருந்தும்ஏன் பொறிகட்
கிழிந்தடிமை ஆகின்றோம்?
எஜமானன் ஆவோம்!
மந்திகள்தான் ஐம்பொறிகள்
மரக்கிளைகள் தாவி
மதிகெட்டு வீழ்ந்தழியோம்
மகிமைசேர் ஞான
சந்திரசே கரகுழந்தாய்
கொட்டுகசப் பாணி
சனாதனம் நிலைபெறவே
கொட்டுகசப் பாணி!

4.2 எப்பொருள்எத் தன்மையதாய்
இருந்தா லென்ன
எல்லாமே எரிநெருப்பில்
ஒன்று தானே
ஒப்பொரென் உயர்ந்தாரென்
உலுத்தர் தானென்
உன்பாதம் தொழுவாரேல்
உய்தி உண்டு
செப்பென்பர் பொன்னோடு
சேர்த்த தன்பின்
செப்புவரோ செப்பென்று
தங்கம் தானே
அப்பாநின் திருவடிகள்
அணைந்தேன் என்னை
ஆட்கொண்டு சப்பாணி
கொட்டு வாயே!

4.3 என்னுள்ளே நீயிருக்க
இளைப்பாறல் கண்டேன்
இசைவானாய் என்பாட்டுக்
கிசையும்நீ ஆனாய்
கண்ணுள்ளே மணியானாய்
கருவானாய் கண்டேன்
கவிவடிவில் படைப்பதற்குக்
கனிமொழிகள் காணேன்
விண்ணாகும் விளக்கானாய்
வெண்ணிலவே எனவா
வெள்ளைமலர்த் தாமரையில்
வீற்றிருக்கும் அன்னை
கண்மணியாய் புவிவந்த
காருண்யா யானும்
கவிபாட வேண்டுவனே
கொட்டுகசப் பாணி!

4.4 வெள்ளத்தின் பெருக்கைப்போல்
கவிப்பெ ருக்கும்
விதவிதமாய் கலைப்பெருக்கும்
மேவ நாட்டில்
உள்ளதெலாம் நித்தியமோ
உனது பாதம்
உலகிற்கே ஒளியீனும்
உரைத்தல் யாண்டு?
கொள்ளைஎழில் ஆனமுக
நுதலம் தன்னில்
குங்குமமும் திருநீறும்
குளிர அப்பி
பள்ளிகொண்ட பாலகனே
பண்கள் கோர்த்துப்
பாடுகிறேன் சப்பாணி
கொட்டு வாயே!

4.5 புன்குழலாய் இசைக்கின்றேன்
பொருந்துவளி நீயே
புண்பட்டால் விரைந்தாற்றும்
ஔடதமும் நீயே
என்செய்வோம் எனத்திகைத்தால்
இயக்குபவன் நீயே
எளியார்க்கும் இயலார்க்கும்
இறைகாட்சி நீயே
வன்கொடுமை பாரதத்தின்
வரலாற்றில் நீயே
வசந்தகால மாருதம்ஆம்
வான்மறையும் நீயே
தான்வீழத் தலைநிமிர்ந்த
தருமசந்த்ர சேகர
தயாபரா ஆடலொடு
கொட்டுகசப் பாணி!

4.6 விரிகதிரைப் பரப்புகின்ற
பரிதி காணின்
விதைமுகத்துக் கண்களெலாம்
விரியும் ஞானக்
குருகண்டு தேர்ந்துவிட்டால்
குளிர்ந்து நெஞ்சம்
குதூகலிக்கும் வாழ்வியலில்
குற்றம் நீக்கி
திருவருளைப் பொழியவந்த
தேவா மோன
சிவசந்திர சேகரனே
சேயாய் இங்கே
உருவான பாடற்கண்
உவந்தாய் இந்த
உலகுய்ய சப்பாணி
கொட்டு வாயே!

4.7 ஒன்றிரண்டு மூன்றாகப்
பலவான துண்மை
உண்மைநிலை யாரறிவார்
ஓங்கார அன்பைப்
பண்பகத்தில் பயிர்செய்தால்
பலனுண்டு இங்கு
பட்டுமரம் விறகாகிப்
பாழ்படுதல் நன்றோ?
மண்புவியில் அறங்களெலாம்
மாண்டனவோ எங்கும்
மமதைகளே அரசாள
மறுமலர்ச்சி என்று?
மன்னவனே சிவசந்திர
சேகரனே துஞ்சும்
மனதைவென் றெடுத்திடவே
கொட்டுகசப் பாணி!

4.8 மாங்காய்ப்பால் உண்டவர்கள்
மலைமேல் நிற்க
மந்திரமே அறியாத
மடையன் நானும்
நீங்காத வினைகளுக்குள்
நின்று கொண்டு
நினைக்கின்றேன் உன்பாதம்
அருளு வாயே?
ஓங்கார நாதமென
உருவம் தாங்கி
உலவிவந்த உயர்ஞான
வடிவே ஈண்டு
தாங்கேன்வெம் மைசந்திர
சேக ராஓ
தருநிழலே சப்பாணி
கொட்டு வாயே!

4.9 நதியோரம் ஆடிவரும்
தென்றலிளங் காற்று
நாணற்பூ மேல்தழுவும்
மாவிலைகள் நாணும்
கதியீதென் றெண்ணிதினம்
களிக்கின்ற வாழ்வில்
கவலைகளும் விமர்சிக்கும்
கருத்துகளும் உண்டு
விதியீதென் றெண்ணிமனம்
வீழ்ந்திடாமை வேண்டும்
வெற்றிகொள்ளும் துணிச்சலொடு
வீறாப்பும் வேண்டும்
பதிநீயும் என்சொல்வாய்
பாலகனே சந்திர
சேகரனே பதமுரைத்துக்
கொட்டுகசப் பாணி!

4.10 விதவிதமாய் எழில்கண்டு
வியந்தேன் வாழ்வில்
விளங்காத புதிர்கோடி
வீழ்ந்தே னில்லை
புதுவிதமாய் அணுகுதற்கும்
புதுமை ஆய்ந்தேன்
போராடும் போர்க்குணத்துள்
புதைந்தே னில்லை
சதுரமுக நினதெழிலில்
சத்யம் கண்டேன்
சாகாமை வேண்டுமென
சமர்ப்பிக் கின்றேன்
விதுரசந்த்ர சேகரனே
வெற்றி காண
வித்தகமாய் சப்பாணி
கொட்டு வாயே!

# 5. முத்தப் பருவம்

5.1 இதழ்வாயில் ஒழுகுசுவை
இன்பச்செந் தமிழோ
இறைமகன்நீ என்குழந்தை
இங்கெனக்கோ பெருமை
புதர்நடுவி லொருமலராய்ப்
பூத்தயெழில் மலரே
புவியிலினி புதுயுகமே
புண்ணியநின் விழிகள்
மதுமயக்கம் தருவனவோ
மகிழ்ந்தினிதிங் காட
மனமாயை ஒழிகிறது
மங்கலங்கள் கூட
சதுரமதி பேர்பெற்றாய்
சத்தியனே சந்திர
சேகரபா ரதிமுதல்வ
தருகவொரு முத்தம்!

5.2 பித்தனென்றும் சித்தனென்றும்
பேசுவார்தம் முன்னே
பிள்ளையெனச் சிரிப்பவிழ்த்துப்
பேதமிலா நோக்கில்
முத்தனென வாழ்ந்திருந்தாய்
முழுமுதலைத் தேர்ந்து
மூச்சாகக் கொண்டிருந்தாய்
மோகனனே யாண்டும்
வற்றாத ஜீவநதி
வார்த்தைகளாய்ப் பொங்க
வரமருளும் வாசவனே
கவின்சந்திர சேகரக்
கொற்றவனே என்குழந்தாய்
தருகவொரு முத்தம்
குறையிரந்து வேண்டுகிறேன்
தருகவொரு முத்தம்!

5.3 அதிசயங்கள் நிகழ்த்தவில்லை
ஆனாலென் நீயோ
அதிசயத்துள் அதிசயமே
காலடிமண் ணில்நின்
அடிபதித்து நடந்தனையே
பல்லக்கை நீக்கி
ஆன்மாவே அர்ப்பணமாய்
அங்களித்தாய் போலும்!
விதிபெரிதா மதிபெரிதா?
வேதாந்த கல்வி
விளக்குதற்கோர் பயிலரங்கம்
அந்நகரில் தோன்ற
நதியெனநீர் வார்த்தனையே
நாயகனே சந்த்ர
சேகரமா தவச்செல்வ
தருகவொரு முத்தம்!

5.4 கலைவாணி சாரதாம்பாள்
காஷ்மீரத் தெய்வம்
காலடிசங் கரர்கண்டு
சிருங்கேரி நகரில்
சிலையாகத் தாபித்த
செழுங்கருணை மாது
சிந்தூரப் பொட்டழகி
திருவடிகள் தேடின்
வலைபோட்டுப் பிடிக்கின்ற
வான்விழியாள் யார்க்கும்
வாழ்வளிக்கும் கோமதிதான்
வாழ்விடமாய்க் கொண்ட
தலையாயத் தர்மயுகச்
சாதகனே ஞான
சந்திரசே கரமணியே
தருகவொரு முத்தம்!

5.5 பூசைபுனஸ் காரங்கள்
புண்ணியருக் கேனோ
புவிமாந்த ருடன்தம்மை
பொருத்துதற்குச் செய்தாய்
ஆசைகொண்ட உலகத்தில்
அற்றதுபற் றென்ப
ஆண்டிபோல எளிமையுடன்
அவனிவலம் வந்தாய்
வேசதாரி நாமெல்லாம்
வேண்டுமோஇவ் வுடலம்
வினையொழியும் நாள்வரையில்
வேதனைதான் என்றாய்
நாசமென மனதாகும்
நாளென்றோ சந்திர
சேகரபா ரதியேநீ
தருகவொரு முத்தம்!

5.6 நாத்திகரென் ஆத்திகரென்
நாடிவந்தோ ராயின்
நலமருளும் நிலைகொண்டாய்
நான்மறைகள் கூறும்
சாத்திரசன் மார்க்கமெல்லாம்
சன்னியாசிக் கேது
சகலமுமாய் நீயிருந்தாய்
சதாசிவா னந்தா
பாத்திரஉ டம்பென்ன
பளிங்குமலைக் குன்றோ
பாதமலர் அழகென்ன
பங்கயப்பூந் தளிரோ
நேத்திரனே சிவசந்திர
சேகரபா ரதியே
நிகழ்காலம் இனிதாக
தருகவொரு முத்தம்!

5.7 திருவிதாங்கூர் சமத்தானத்
திருமகன்நீ எனவா
திவான்ராம சாமிகண்ட
செல்வன்நீ எனவா
திருவாடு துறைசைவ
சிவம்நீயே எனவா
தீந்தமிழ்த்தேன் சுவைபெருகும்
தேவாரம் எனவா
சிருங்கேரி பெற்றெடுத்த
திவ்யபரம் பொருளின்
தேசுடைய நாயகனே
சிவசந்த்ர சேகர
அருள்பூத்த சோதியனே
அகம்பாவம் தூர்க்கும்
ஆனந்த மோகனனே
தருகவொரு முத்தம்!

5.8 கருநாடு மைசூரின்
கலங்கரைவி ளக்கே
கருமுகில்நின் நீலவிழி
கலங்குவதேன் அய்யா
பருவமழை தவறியதோ
பாழ்பட்டு வையம்
படர்நதிகள் வற்றினவோ
பரம்பொருள்சீர் ஈண்டு
கருதுநிலை குறைந்ததனால்
கண்டபலன் இதுவோ
காருண்யா என்றும்வாழ்
கடவுளறச் செல்வ
மருதநிலம் வளம்செழிக்க
மகிழ்சந்த்ர சேகர
மாதவனே வருகவந்து
தருகவொரு முத்தம்!

5.9 மண்செழிக்க மனம்கொழிக்க
மக்களறம் ஓங்க
மகிழ்தலத்தில் திருக்குறளின்
மகிமைகள்நின் றோங்க
பண்கொழிக்கச் செழுந்தமிழில்
பாடல்பண் போங்க
பாரதவான் மீகவறம்
பார்வியந்து போற்ற
தண்குமரித் துறைகன்னித்
தவவலிமை ஓங்க
தாலாட்டும் கடலலைபால்
தளிமதியம் தூங்க
கண்விழித்தும் இதழ்குவித்தும்
கனகசந்த்ர சேகர
காருண்ய, மகிழ்கவென
தருகவொரு முத்தம்!

5.10 மொத்தமாகத் தருவாயோ
முருகவேளே முத்தம்
முத்துமுத்தாய்ப் பொழிவாயோ
முகில்மழைபோல் நித்தம்!
வித்தகனே கவிநயங்கள்
விளைவிலென்ன சத்தம்
விளையாடி நீதந்தாய்
வேண்டுமட்டும் முத்தம்!
புத்தகங்கள் உரைத்திடுமோ
புண்ணியநின் மேன்மை
புரிந்தாலும் சொலத்தகுமோ
போக்குவர வில்லாய்
சித்தமெலாம் பரமான
சிவசந்த்ர சேகர
சேயேநீ இன்னுமின்னும்
தருகபல முத்தம்!

## 6. வருகைப் பருவம்

6.1 சிரீகண்ட சாஸ்திரிகள்
அறிவின் மிக்கார்
சிருங்கேரி திருமடத்தின்
மேன்மை காணும்
நிருவாகத் திறணாளர்
நேர்மை வாழ்க்கை
நிதர்சனமாய் பேணுபவர்
அவரின் கீழே
பெருமையெலாம் மிகசேர
சார தாம்பாள்
பேரருளைப் பொழிகின்றாள்
பிள்ளை நீயும்
திருவாட்டி மடிகளிலே
தவழ்கின் றாயோ
திருவடிகள் நிலம்பதிய
வருக நன்றே!

6.2 கால்பட்ட இடமெல்லாம்
கழனி யாகும்
கருணைகூர் கடவுளருள்
காட்சி யாகும்
நூல்பட்டுத் துலங்குகிற
அறிவே போல
நுகர்வெல்லாம் செறிவாகும்
கடம்பன் கந்தன்
வேல்பட்டு மறைகின்ற
வினைகள் போல
வேதனைகள் இலவாகும்
இதயம் எல்லாம்
பால்பட்டுக் கனிவாகும்
நரசிம் மையா
பாதங்கள் நிலம்தோய
வருக நன்றே!

6.3 பிடிபோல நடைபயிலும்
பிள்ளாய் யார்க்கும்
பிடிபடாத ஞானத்தைப்
பிழிந்தெ டுத்தப்
படிகொண்டிங் களக்கின்ற
பரமன் செல்வ
படிப்பதற்கிங் கென்னாலே
முடியும் ஆமோ?
மிடியாவும் உன்பார்வை
மேன்மை யாலே
மிகச்சிதறிப் போனதைய்யா
நரசிம் மையா
அடிநொகு மென்றோநீ
அஞ்சு கின்றாய்
அருந்தமிழ்பண் பாவிரித்தேன்
வருக நன்றே!

6.4 கருணைமுகில் வான்மீது
ஊர்வ லம்போம்
கவின்கூரக் காட்சிமிக
நன்றே ஆனால்
அருமழையாய் பொழிந்திந்த
நிலத்தின் மேல்நீ
அடிவைத்தால் தானழகே
அமிழ்தம் ஆகும்
திருமறைகள் புகழ்கின்ற
சிவமே தன்னில்
சிந்தனையின் பொலிவாக
திகழும் அய்யா
பெருமானே நரசிம்ம
பிள்ளாய் ஞானம்
பெறுகபுவி எனமெல்ல
வருக நன்றே!

6.5 தமிழுக்கே அமுதென்றோர்
பேருண் டய்யா
தாங்காத துயர்வந்தால்
அதனை மாந்த
குமிழ்சிரிப்பென் இதழ்விரியும்
குறைகள் போகும்
கூற்றுவனும் எனைக்கண்டு
விலகி நிற்பான்
சிமிழ்இதயத் துனைவைக்க
நரசிம் மைய்யா
சிந்தனைகள் நீயானாய்
சிறுமை இல்லை
இமைமூடா திருக்கின்றேன்
நிலத்தின் மீதுன்
இணையடிகள் பதியமெல
வருக நன்றே!

6.6 பிட்டுக்கு மண்சுமந்த
பெருமான் தன்னை
பேசுகவி இன்பத்தால்
பிறங்கும் அந்தத்
தட்டுக்குள் இருந்ததென்ன
உலகின் மாயச்
சருகுகளோ? போகட்டும்
அவனின் தாள்கள்
பட்டுச்சி றந்ததிந்த
பரத நாடு
பாரதியே நரசிம்ம
பாலா நீயும்
தொட்டாயென் இதயத்தை
மகிழ்ந்தேன் பூமி
தொடும்பேறு கிடைக்கட்டும்
வருக நன்றே!

6.7 உடம்பிருக்க ஆன்மாவைத்
தனித்த றிந்தே
உன்னதத்தோ டுரையாடி
உவகை கண்டு
குடம்தேனில் வீழ்ந்தவொரு
வண்டு போல
குதூகலத் துறவுநிலை
உற்ற தேவா
அடம்பிடித்தவ் வமிழ்தத்துள்
மூழ்க வேண்டா
ஆசையோடிங் கழைக்கின்றேன்
தமிழின் தீம்பண்
வடம்பிடித்திங் கெழுந்தோடி
வருக ஞான
வரம்வேண்டும் நரசிம்ம
வருக நன்றே!

6.8 கூத்தரசன் போல்நடனம்
ஆடு கின்ற
கோமேத கச்செல்வ
நரசிம் மையா
யாத்துவைத்தக் கவியாவும்
உனக்கா கத்தான்
இளைப்பாற வேண்டுமென்றால்
பருகிக் கொள்க
காத்திருக்க மனமில்லை
கைகள் தட்டிக்
கைகூப்பி அழைக்கின்றேன்
தரையின் மீதுன்
பூத்தமலர்த் திருவடிகள்
பதிக மெல்ல
புவிபோற்றி புகழ்பாட
வருக நன்றே!

6.9 சதாசிவப் பிரமேந்த்ராள்
நூல்கள் தம்மை
சந்ததமும் பாடிசிவம்
தானாய் மாறி
முதலாகி நிகழ்வாகி
முடிவும் ஆகி
மும்மையும்வென் றெடுத்துலக
முற்றாய் நின்ற
சுதாகரா, வனப்பூங்கா
சுவர்க்கம் ஆக
சுந்தரத்தண் தமிழ்ப்பாடல்
மறந்தாய் கொல்லோ?
பிதாமகனே, நீயிங்கென்
குழந்தை, கொஞ்சம்
பேசவேண்டும் நரசிம்ம
வருக நன்றே!

6.10 ஆட்கொள்ள நீவருவாய்
அறிவேன் என்றன்
அகம்பாவம் உனைமறைத்து
நிற்கும் ஆமோ?
காப்புரிமை உனக்குண்டு
எதிரில் தோன்றும்
களங்கமெலாம் நீக்கியருள்
புரிவ தற்கு!
கோப்புகள்மேல் கோப்புகளாய்
விண்ணப் பங்கள்
குளிர்தமிழால் குவித்துள்ளேன்
குழந்தை நீயென்
பாப்புனைவின் இசைத்தமிழாய்
வருக அய்யா
பார்மகிழ, பதம்தவழ
வருக அய்யா!

# 7. அம்புலிப் பருவம்

7.1 பைம்பொழில் வெள்ளைப் பனிமலர் விரிய
பாலொளி நல்கும் மதியே
பக்குவ ஆன்மா பயனுற தீட்சை
பார்வையா லீனும் பாலன்
ஐம்புல னவித்த அறிவன் மதியன்
அய்யன் சந்த்ர சேகர
அழகன் ஞான அமுதன் யார்க்கும்
அருளும் பதும மோகன்
செம்பொன் நிறத்தவன் சித்திர வடிவினன்
செங்கம லம்போல் சிரிப்பவன்
சிருங்க புரியின் செல்வக் குழந்தை
சீர்துங் கைக்கரை புதல்வன்
அம்புவி பிறந்ததென் அழகால் உன்னையும்
ஆட்கொளக் கருதிய ஆவல்
அன்பால் இசைந்திங் கொத்துகை சேர்த்தே
அம்புலி ஆட வாவா!

7.2 வெள்ளைத் தாமரை வீற்றிருப் பாளொரு
வீணை செய்யும் ஒலியில்
விளங்கு மன்னை வித்தக செல்வன்
விழியில் தண்மை குவியும்
கொள்ளை அழகுக் குங்கும வதனன்
குளிர்வெண் மதியே உன்போல்
குவலயம் சுற்றி வந்தவன் காலடி
குமரியைத் தொழுது நின்றவன்
பிள்ளை அவனுடன் பேசி மகிழ்ந்து
பெருமிதத் துடனே ஆடலாம்
பெம்மான் சந்த்ர சேகரன் பெருமைகள்
பேணி நீயும் கூடலாம்
அள்ளற் பழனத் தரக்காம் பல்கள்
அதரம் திறந்தன காண்குதி
ஆடிப் பாடற் கேற்ற பொழுதிது
அம்புலி ஆட வாவா!

7.3 சாந்தி வனத்திடை சத்த மொடுங்கின
சந்திர சேகர பாலன்
சச்சிதா னந்த சமாதி நிலையில்
சகலமும் ஆயினன் காண்நீ
நீந்தி முகிலிடை நித்தம் வலம்வரும்
நீல வான்சிறு மதியே
நின்று என்றுநீ நிம்மதி கண்டனை
நித்தமும் தேய்வதுன் குறையே
ஏந்தும் மனத்தினர்க் கென்றும் நலமருள்
நித்தில னன்றோஸ் வாமி
இலையொன் றொருநாள் இறந்துபின் மிண்டனை
எப்படி நீயவர்க் கிணைசொல்?
சாந்த முகத்தவன் சந்திர சேகர
சாமியோ டாடுதல் பெருமை
சமுத்திரம் கண்டு சருகென வீழாய்
அம்புலி ஆட வாவா!

7.4 தொட்டவை துலங்கும் துயர்மருண் டோடும்
தூயவன் அவன்தாள் பணிய
தொல்லை தரும்பிணி தொலையும் ஞானத்
தூரிகை சித்திரம் வரையும்
எட்டநில் லாதவன் எவர்க்கும் அமுதம்
இணையடி தொழுதால் தருவான்
இதயக் குடிலில் இருக்கக் கூறினும்
இசைவாய் உடன்வந் தமர்வான்
பட்டுவெண் மேனியன் பாசத் தீவினை
பாழ்பட வருளும் பாங்கினன்
பளிங்கு நிலவே நீயவன் பாதப்
பதமலர்க் கும்இணை யில்லை
கட்டில் காதலர் கருத்தில் கிடந்து
களிப்பதென் வாழ்க்கை சொல்நீ
கடவுட் குழந்தையின் றழைத்தனன் இனிதே
அம்புலி ஆட வாவா!

7.5 மிதிலை சானகி முகம யோத்தியில்
மெலிந்து வருந்திய தென்னை?
மீண்டபின் னாலும் விதிவலி யதுதான்
மிகுந்ததே வாழ்வில் தொல்லை!
சதியிதென் றெவரும் சாதிப்ப ரோவிண்
சந்தத முலவும் நிலவே
சனிய னாயொரு பாம்புனைப் பற்ற
சாதலும் கண்டாய் இன்று
மதியென உன்னை மதிப்பவ ருண்டு
மலர்போல் உதிர்கின் றாயே
மணமுனக் கேது மாநில மீதில்
மகிமையும் உண்டோ இல்லை
நதியென எவர்க்கும் நன்மைகள் செய்தே
நடக்கின் றானொரு நம்பி
நற்றவன் சந்திர சேகரன் அவனோ(டு)
அம்புலி ஆட வாவா!

7.6 விண்மீன் அனைத்தையும் பொட்டலம் கட்டி
வீதியில் கொண்டு தரவோ
விரையும் முகிலைப் பிடித்து நிறுத்தி
வெள்ளித் திவலைகள் பெறவோ?
கண்ணில் தெரியும் காட்சிக ளெல்லாம்
கவிதைக ளாக்கித் தரவோ
காலில் லாத கானகப் பறவைநின்
கண்களுக் கொளியாய் வரவோ
எண்ணில் லாத இன்ப மோகனம்
இசைசீ தனமாய் தருவேன்
இடர்பட் டிளைத்த இளவெ ண்ணிலவே
இதயம் மகிழ்ந்தே ஈண்டு
மண்ணில் பூத்த சந்திர சேகர
மழலை யோடுற வாடின்
மங்கலம் பெருகும் வாவா இனிதே
அம்புலி ஆட வாவா!

7.7 என்மகன் சந்திர சேகர னுடனந்
இசைந்தே ஆட வந்தால்
என்னைத் தருவேன் எதுவும் தருவேன்
எனதுயிர் கேட்பினும் ஈவேன்
பொன்முகம் காணப் பொழுதும் இன்பம்
பூதலத் தினிமை பெருகும்
புரிந்திலை கொல்நீ முகிலில் தோய்ந்து
முக்கா டிட்டதென் நிலவே
கன்மனம் கரையும் கருத்தினில் அமுதக்
கவிதை ஊற்றுப் பெருகும்
கருணை மூர்த்தி சந்திர சேகரன்
காருண் யன்பேர் சொன்னால்
புன்மைகள் அகல, புத்தொளி பெருக
பூத்தாய் மலர்போல் நன்றே
புண்ணியன் எமது புதல்வன் தம்மொடு
அம்புலி ஆட வாவா!

7.8 வாராய் வாராய் என்றினி உன்னை
வழுத்தி வேண்டுவ தில்லை
வாடுவ தேநின் வாடிக் கைகொல்
வாழ்வினி பெரிதும் தொல்லை
நேராய் நிற்கும் நிறையில் லாய்நின்
நீட்சியைக் கண்டு நெகிழ்ந்தேன்
நித்தமும் மெலியும் நினதுடல் காண
நெஞ்சமும் பதறி தளர்ந்தேன்
கூராய் இருந்தும் கொள்கையில் லாமல்
கூற்றுவன் கைப்பட் டாயோ
குணமே வியளம் சந்திர சேகர
குருவின் பாதம் பணிவாய்
தீராப் பிணியும் பிறவியும் தீரும்
தெளிவாய் இன்றிங் குடனே
சேய்மகிழ்ந் திடவே சிறகுகள் அசைய
அம்புலி ஆட வாவா!

7.9 வீழ்ச்சி வேண்டுமா விளக்கம் வேண்டுமா
விரும்பிய துடனே கேள்நீ
வித்தகன் எமது சந்திர சேகரன்
விழைந்துடன் அருள்வான் கொள்நீ
மாட்சிமை மிக்கவன் மங்கல மானவன்
மரிக்கொழுந் தனயை மாதவன்
மண்டியிட் டோரை மன்னித் தேற்கும்
மகுடா பதியவன் சூரியன்
தாழ்ச்சிபட் டினிமேல் தலைகுனி யாதே
தங்கச் சிமிழே நிலவே
தருணம் இதைநீ தவற விடாதே
தரையிறங் குகவே, காலம்
ஆட்சிசெய் கின்றது ஆடல் பாடல்
அமளியில் நீயும் கலந்து
ஆளுமை கொள்க அழகன் அழைத்தனன்
அம்புலி ஆட வாவா!

7.10 வாயில்வந் திரப்பின் வரம்தரு வோனை
வாழ்த்திப் பண்கள் பாடு
வார்த்தைகள் ஆயிரம் வாரணம் ஆக
வரவேற் றிசைகள் பாடு
நோயில் நீயினி நொடிவது இல்லை
நுகர்பொருள் இறையென் றாடு
நூற்கும் நினைவுகள் நுண்ணிய னருளின்
நுட்பம் பெருமைகள் தேடு
கோயில் பற்பல கட்டிய தோடு
குடமுழுக் கும்பல செய்தான்
குவலயம் தழைக்க குதூக லித்தவன்
குரவையும் ஆடுவன் என்றும்
தாயிற் சிறந்த தயாப ரன்நம்
சந்திர சேகர னோடு
சத்தியம் ஆக சரித்திரம் ஆக
அம்புலி ஆட வாவா!

# 8. சிற்றில் பருவம்

8.1 கல்விச் செல்வக் கலைக ளறிந்து
கடவுள் பண்புணர்ந்து
கருவிக ளான பக்தி ஞானம்
கரும வினைதெரிந்து
தொல்லைப் பிறவி சூட்சுமம் யாதென
துணிந்து கண்டறிந்து
தொன்மை பாரதத் தூய்மை பொலிய
துறவில் தான்மகிழ்ந்து
எல்லையில் லாத இன்ப இறையில்
இருந்தவ மாமுனிவ
எப்படி நின்புகழ் பாடுவன் ஏழை
எடுத்த மொழிஅமிழ்து
செல்வ சந்திர சேகர உனது
திருவடி நோகாதோ
தீந்தமிழ் கவியால் கட்டி னேனிச்
சிற்றில் சிதையேலே!

8.2 விண்ணை மண்ணை வியந்து போற்றி
விருத்தப் பாப்புனைந்து
வெண்பா விலும்நின் வெற்றிப் பயண
விளக்கம் தான்கொணர்ந்து
கண்ணை மறைத்தக் கவலைகள் யாவையும்
கட்டி வைத்துவிட்டுன்
காலடி சரணெனக் கண்டேன் காலடி
கவிகூர் நாயகனே
என்னையும் ஆட்கொள் எப்படி நாயினை
எடுப்பதென் றெண்ணாதே
இழிந்தவ னாயினும் இதயக் குவளையில்
என்றும் நன்றியுண்டு
தென்றலாய் வரும்நீ தீந்தமி ழால்செய்
சிற்றில் சிதையேலே
சிவமே சந்திர சேகர சேயே
சிற்றில் சிதையேலே!

8.3 விதியா மதியா வெல்பவர் யாரெனும்
விளையாட் டினிதாகும்
வென்றவர் தோற்றவர் வித்தகக் கலையில்
வெற்றிடம் பலவாகும்
புதிரா இருந்தாய் பூட்டிய அறையுள்
பூசனை செய்துவந்தாய்
பொருந்தா சடங்குகள் போனபின் இறையை
போற்றி துதித்துவந்தாய்
கதியே என்றிறைக் கரங்களில் கொடுத்து
கவலை துறந்திருந்தாய்
காலமுக் காலமும் கடவுள் திருவடி
களித்து மகிழ்ந்திருந்தாய்
நதியாய் பரந்தவ சந்திர சேகர
நாயக சொற்கொண்டு
நற்றேன் கலந்திவண் நயம்பட செய்தனன்
சிற்றில் சிதையேலே!

8.4 நாளும் கோளும் என்செயு மய்யா
நாதன் துணையிருந்தால்
நாதமும் விந்தும் நாயகன் ஆனபின்
நன்மை தீமையுண்டா
ஆளும் வர்க்கம் அடிமையென் றெவரும்
அவனியில் இல்லையன்றோ
அவரவர் செய்தொழில் அளவிற் கேற்ப
ஆணவம் வந்துறுமோ
தாளும் தண்டையும் தலைவைப் பார்க்கிருள்
தாக்கம் மிகக்குறையும்
தன்னம் பிக்கை தான்அது வாயின்
சகலமும் சௌபாக்யம்
ஏழை தமிழ்கொண் டிங்கே அமைத்தனன்
எழில்சேர் சிறுகுடிலே
இறைவா சந்திர சேகர சேயே
சிற்றில் சிதையேலே!

8.5 ஆள்வினை உடைமை அதிகா ரத்தில்
அய்யன் வள்ளுவன்சொல்
ஆக்கம் விதியை அதட்டி மிரட்டும்
அன்பே நிலைநிற்கும்
ஊழ்வினை கொஞ்சம் உருத்துவந் தாலும்
உழைப்பின் முன்மலைக்கும்
உறுதிகொண் டவர்க்கோ உலகில் வாழ
உண்மை ஒளிகொடுக்கும்
தாழ்வெனப் படுவது தன்னல மொன்றே
தருமம் கைகொடுக்கும்
தமிழாய் வோரை சாவென் செய்யும்
சத்தியம் அழியாது
சூழ்பழங் கிழவியின் குளிர்மொழி யமைத்தக்
குடிலிது சிதையேலே
கோவே சந்திர சேகரக் குழந்தாய்
சிற்றில் சிதையேலே!

8.6 வானில் கிடந்த வெள்ளிகள் கொண்டு
வனைந்த சிறுசிற்றில்
வாசத் தமிழின் வண்ணம் வைத்து
வரைந்த ஓவியமே
தேனில் ஊறிய தீங்கவி யமுதம்
தெளித்த முற்றமுண்டு
திரவிய மாகத் தேடிய ஆன்மத்
திருவடி கொற்றமுண்டு
நானென் என்றும் நானார் என்றும்
நாடும் மனமுண்டு
நற்றவ மோனம் நல்வினை யருள
நாதசொ ரூபமுண்டு
தானென் ஆணவத் தடைகள் அகலச்
சத்தியம் அங்குண்டு
சாதக சந்திர சேகர பாலக
சிற்றில் சிதையேலே!

8.7 கரும வினைகள் காவலா இல்லை
கட்டிடம் சிதைப்பவையே
கண்ணின் காட்சிகள் கலைநய மாயினும்
கற்பனை பொய்யுருவே
தருமம் ஒன்றே தரணியில் நிலையாம்
தமிழில் குறளாகும்
தர்க்க வாதமும் வர்க்க பேதமும்
தலைகீழ் நெறியாகும்
உருவம் அருவம் கடந்தவன் இறைவன்
உரைப்பதற் கெளிதாகும்
உண்முக நோக்கில் உணர்ந்தவர்க் கதனில்
ஊறுதல் அமிழ்தாகும்
பருவம் மாறும் பாதைகள் மாறும்
பத்தியால் கட்டிவைத்த
பதிகம் மாறுமா பாலக சேகர
சிற்றில் சிதையேலே!

8.8 மாதமும் மாரி பொழிந்த துண்டு
மழையே யில்லையின்று
மலைகள் காடுகள் மரங்கள் அழிந்ததால்
வறட்சி புவியிலின்று
நாதமும் இசையும் நகர்வலம் காண
நன்மைகள் படர்ந்ததன்று
நச்சுப் புகைகள் நாளும் பரவ
நன்னீர் குறைந்ததின்று
வேதமும் கல்வியும் என்செயும் மனிதன்
வேட்கைகள் மிகுந்தனவே
வேட்டைப் புலமென நாட்டைக் கருதிட
வெறுமை நிறைந்ததுவே
போதக ஞானப் புரவல சந்திர
சேகர புண்ணியனே
பூவடி நோகும் புனிதா எனதிச்
சிற்றில் சிதையேலே!

8.9 நானுனைப் பற்றி நல்லது செய்து
நன்மைகள் தேறுகிறேன்
நாளும் உழைப்பை நாடுவோர்க் கீந்து
நாட்டைப் போற்றுகிறேன்
கானகக் குயிலாய் கன்னித் தமிழில்
கவிதைகள் பாடுகிறேன்
கனிச்சா றுடன்கற் கண்டுப் பொடிகள்
கலந்ததில் ஊற்றுகிறேன்
வானவ ராயினும் வந்தும கிழ்ந்திட
வார்த்தைகள் சூடுகிறேன்
வாசமெ தாயினும் வளரான் மீக
வாயிலைப் போற்றுகிறேன்
தானமும் தவமும் தான்செய் துயர்ந்தவ
சந்திர சேகரனே
தமிழால் கட்டிய தங்க மாளிகை
சிற்றில் சிதையேலே!

8.10 எண்ணிய எண்ணியாங் கெய்துவர் இங்குநான்
இறையைப் பற்றுகிறேன்
இகழினும் புகழினும் எல்லாம் ஒன்றென
என்பணி தொடருகிறேன்
திண்ணிய நெஞ்சம் தெரிந்தநல் லறிவுடன்
தேடிப் பற்றுகிறேன்
தீமையொன் றணுகின் திரிபற பொருது
தேர்வில் மின்னுகிறேன்
பண்ணிய வினையின் பயன்கள் எம்மை
பரிவுடன் தாலாட்டும்
பாலகன் சந்திர சேகர பாரதி
பக்தி நலம்கூட்டும்
தின்னனைப் போல்நான் இல்லை எனினும்
சிற்றில் சிதையேலே
சேயே சந்திர சேகர இங்கிச்
சிற்றில் சிதையேலே!

# ௯. சிறுபறைப் பருவம்

9.1 காலடி பிறந்தவர் கண்களில் கண்ட
காந்தக் கதிர்வீச்சு
கல்லை உருக்கி கனியென் றாக்கிடும்
கருணை ஒளிக்கீற்று
தாளடி பணிந்தவர் தவநிலை எய்துவர்
தானற் றுதிர்வாகும்
தன்னில் நிலைக்க தானே அதுவாம்
தன்மை உருவாகும்
நாலடி பொருளும் நற்றிருக் குறளும்
நடந்திவண் வந்ததுவோ
நாத பரம்பொருள் நாமிங் குய்ய
நாடகம் புனைந்ததுவோ
பாலக சந்திர சேகர பாரதி
பந்தய உலகமிது
பாடி மகிழ்ந்தனம் பங்கயச் செல்வ
சிறுபறை முழக்குகவே!

9.2 ஆதி சங்கரர் அவதா ரத்தில்
அரன்மிக மகிழ்ந்தனனோ
அறம்பொரு ளுரைத்தே அவன்நமக் கருளிய
தான்ம நெறியலவோ
பேதம் தவிர்த்த ஒருமைஅத் வைத
பெருமைக் கிணையேது
பேசும் சமயம் யாவும் அதனுள்
பிறங்க விடிவன்றோ
நாதம் விந்து நமசி வாயம்
நம்மவர் பண்ணாக
நாடி துய்த்தவர் நாளும் வாழ்வினில்
நன்மை பெறுவரன்றோ
போதம் இதனில் பொருந்தி சங்கரப்
புனிதம் ஆனவனே
புண்ணிய சந்திர சேகர பாலா
சிறுபறை முழக்குகவே!

9.3 பத்தோ டொன்று பதினொன் றானபின்
பன்னிரண் டில்பிறந்த
பாலக ஞானப் பாலமு துனக்குப்
பரமன் ஊட்டினனோ
வித்தாய் இருந்த பொழுதே உனக்குள்
வித்தகம் தூங்கியதோ
வெள்ளைச் சிரிப்பின் அழகில் பரிதி
வெண்மை வாங்கியதோ
முத்தா ரத்தமிழ் முருகே உனது
மோகனம் என்பதுவோ
மூவுல கத்தம ர்குழு வந்திவண்
முகமன் பொழிவதுவோ
சித்தம் சிவமாய் சின்மய மான
சேயே களிகூரச்
சிந்தனைப் பண்கள் செழித்திட வேண்டும்
சிறுபறை முழக்குகவே!

9.4 வாழ்க வையகம் வாழ்க வளமுடன்
வாழ்த்திசை ஒலிக்கிறது
வாச வன்நின் திருவடித் தாமரை
வாழ்வெனக் களிக்கிறது
மூழ்கும் நித்திய மோன தவத்தினில்
முன்வினை அறுகிறது
முத்திரை பதிக்கும் இத்தரை வாழ்வில்
மோகனம் மலர்கிறது
ஆழ்சுவை அமுதம் அருத்தினை யோஎன
ஆன்மா ஒளிர்கிறது
ஆனந் தப்பண் அருமைத் தமிழ்நின்
அருளால் கொழிக்கிறது
வாழ்விய லாக்கம் வளர்கிற தனையை
வரவுகள் தெரிகிறது
வாசவ சந்திர சேகர அரசே
சிறுபறை முழக்குகவே!

9.5 இன்று புதிதாய் இப்புவி பிறந்தது
இணையடி தொழுகின்றோம்
இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்ட
இறைவா பணிகின்றோம்
கன்றுமுன் நடக்கும் காராம் பசுவெனக்
கருணை கொண்டவனே
கதறுமுன் வந்து கடும்பசி போக்கும்
காருண்ய மோகனனே
நன்றும் தீதும் நம்வினைப் பயனா
நாடக உலகத்தில்
நாளை நடப்பவை நானறி யேனே
நன்மைகள் பெருகட்டும்
தன்மய மானவ சந்திர சேகர
சதாசி வப்பெரும
சந்திர சேகரப் பாரதி செல்வ
சிறுபறை முழக்குகவே!

9.6 விரித்த விழியால் மேதினிக் கொளிசெய்
வித்தக வாரிதியே
வெள்ளிப் பனிமலை விருத்தனின் அருளால்
விருத்திகள் பெற்றனையோ
கரித்த கடல்நீர் கார்முகி லாகிக்
கழனியில் பொழிகிறதே
கடையேன் தனையும் கடைத்தேற் றுதல்நின்
கடமை எனநிற்பேன்
தரித்த வேடமித் தரணியில் எத்தனை
தயக்கம் மிகுகிறது
தனித்த உணர்வில் தருக்கை ஒழித்து
தானே மகிழ்கின்றேன்
சிரித்த சிரிப்பில் சிறுமைகள் அகல
சேயே சிவபாலா
சந்திர சேகரப் பாரதி செல்வ
சிறுபறை முழக்குகவே!

9.7 கிறித்தவர்கள் நாத்திகர்கள்
குமரி மண்ணில்
கேள்வியினால் உனைமடக்கத்
துணிந்த போதும்
அறிந்தவர்க்குப் பதிலுரைத்து
ஆட்கொண் டாயே
அறியாமை மதமாற்றம்
என்றாய் நன்று!
சரித்திரமாய் காலடியில்
பிறந்த தெய்வச்
சன்னதியில் வேதாந்த
பாட சாலை
திறந்துவைத்தன் றருள்செய்த
குருவே சந்த்ர
சேகரனே சிறுபறைநீ
முழங்கக் கொட்டே!

9.8 இறைமகன்சங் கரர்சன்ன
திக்கண் வந்தால்
எல்லோரும் மாணாக்கர்
பேதம் ஏன்கொல்
மறைகல்வி எல்லோர்க்கும்
பொதுவில் ஆகும்
மார்க்கங்கள் நலம்காண
வழிகள் செய்தாய்
நிறைதமிழில் சத்தியமங்
கலத்தில் நீயும்
நெடியஉரை ஆற்றினையே
எங்கு கற்றாய்?
சிறைவைத்துப் பூட்டியதேன்
அமல சந்தர
சேகரனே சிறுபறைநீ
முழங்கக் கொட்டே!

9.9 மருத்துவர்கள் வந்துன்னை
ஆய்ந்த போதும்
மகிழ்வுடனே நீயிருந்தாய்
தளர்ந்தாய் இல்லை
அருந்தவத்தால் ஆன்மாவுள்
நிலைத்த உன்னை
அவராய்வு என்செய்யும்?
மடநீர் வாகம்
பொருந்துவதோ உன்றனக்கு
புறத்தை விட்டுப்
புண்ணியனே அகநோக்கிற்
பொலிந்த நின்பால்
மருந்துகளைப் படிமாற்றம்
நல்கும் நீயும்
மயங்காதே சிறுபறையை
முழங்கக் கொட்டு!

9.10 நந்தவனப் பூந்தோட்டம்
சிறைவா சம்போல்
நாயகனே ஆனதுவோ
நானி லத்தில்
சிந்தனைகள் மேம்பட்டால்
சித்த னென்பார்
செயலற்ற பெருநிலையைச்
சிறுமை என்பர்
வந்தனைகள் செய்தாரும்
வசைகள் பெய்வர்
வரலாற்றின் நிலையறியார்
வாழ்க்கை தன்னை
நொந்துமனம் குமுறுவதால்
பயனென் கொல்லோ
நூபுரம்போல் சேகரனே
பறைநீ கொட்டாய்!

## 10. சிறுதேர்ப் பருவம்

10.1 பரவை யலைகள் பாட்டிசைக்கப்
பரிகள் ஏழில் வரும்பரிதி
பாரின் இருளைப் போக்குகிறான்
பசுமை அழகைக் கூட்டுகிறான்
கருமை வானில் வரும்முகில்கள்
கடலின் நீரை முகந்தெடுத்து
கழனி தோறும் பொழிகிறது
கருணை இனிமை தழைக்கிறது
ஒருமை நிலையில் பிறர்வாழ
உதவும் மாந்தர் இருப்பதனால்
உலகம் நிலைபெற் றிருக்கிறது
உண்மை நாளும் ஜெயிக்கிறது
திருவே சந்திர சேகரபா
ரதியே செல்வா சிவநேசா
சீவ முத்தியும் வேண்டுவதோ
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.2 வறட்சி தென்னகம் ஆட்டுவிக்க
வருண ஜெபங்கள் செய்வித்து
வருவித் தனையே பெருமழையை
வாசவ உன்னைப் போற்றுகிறேன்
அறைக்குள் தனியே இருந்தாலும்
ஆன்ம தாகம் குறைந்ததுவோ
அரனாய்த் தோன்றி நடனமிட்ட
ஆனந் தத்தை என்சொல்வேன்
கறந்த பாலின் சுவைபோலக்
கன்னித் தமிழில் நீபேசும்
காட்சிகள் கண்டேன், குமரியிலே
கடலொலி போன்றது நின்முழக்கம்
திறந்த மனதுடன் வேண்டுகிறேன்
தேவே சந்திர சேகரனே
தீமைகள் புவியில் சிறுத்திடவே
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.3 வசிட்டர் வியாசர் வழிவந்த
வாலைக் குமர, சாரதாம்பாள்
வண்ணச் சீரடி ஒன்றேதம்
வாழ்நாள் பேறாய் எண்ணியவா
நசித்த மனதில் விடுபட்டு
நாயகன் நீயென் றானபின்பும்
நாடு வாழ எண்ணினையே
நலிந்தது உடல்தான் வேறென்ன?
பசித்த தென்றுண வுண்டனையோ
பரமன் தாளே நினைத்திருந்தாய்
ஆத்ம வித்யா விலாசத்தின்
பண்ணிற் கலந்து பரமானாய்
திறந்த மனதுடன் வேண்டுகிறேன்
தேவே சந்திர சேகரனே
தீமைகள் புவியில் சிறுத்திடவே
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.4 விண்ணில் பறக்கும் பறவைகள்
விரிப்ப தில்லை கால்களையே
விரிநீர் பரப்பில் மீனினங்கள்
விரைவு கண்டு மகிழ்வதில்லை
எண்ணம் நீர்த்திறை தாள்களிலே
இரண்டறக் கலப்பவர்க் கெப்படித்தாள்
இவ்வுல காசா பாசங்கள்
எதிர்நின் றிடறும்? இருந்தாலும்
தன்னை நாடி வந்தவரை
தானே எதிர்கொண் டையமறத்
தர்மோப தேசம் செய்கின்ற
தவமா தவனே போற்றுகிறேன்
திறந்த மனதுடன் வேண்டுகிறேன்
தேவே சந்திர சேகரனே
தீமைகள் புவியில் சிறுத்திடவே
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.5 அபிநவ வித்யா தீர்த்தஸ்வாமி
அடுத்த மடாதி பதியாக
அய்யா நந்த வனத்தினிலே
ஆன்ம சொரூபத் துறைந்தனையோ
படிக லிங்கப் பூஜைமுறை
பாலக சுவாமிக் களித்துவிட்டு
பயணம் தொடர்ந்தனை பலவூர்கள்
பக்தருக் காசிகள் வழங்கிடவோ?
அதிபதி யாகநீ விரும்பவில்லை
ஆயினும் ஆருனை விட்டார்கள்
அறுபதாம் ஆண்டு பிறந்ததினம்
ஆரா தனைகள் அற்புதமே
கபில வஸ்து மன்னருக்கும்
கருணை கூர்ந்த மாதவனே
காவல சந்திர சேகரனே
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.6 கருநா டகத்துக் காவிரியைக்
கட்டைக் குறுமுனி அகத்தியனும்
கன்னிச் செந்தமிழ் நாட்டுக்குக்
கலயத் தடைத்துக் கொண்டுவந்தான்
அரசிய லாளர் அஃதறியார்
ஆணவப் போக்கால் அதுதடுக்க
அழகியல் ஒழிந்தது பூமியெலாம்
அல்லற் பட்டது ஆனால்நின்
குருவருள் மைசூர் குட்குவிட்டு
குளிர்மதி ஒளியாய் இவண்பரவ
குறுக்கிடு வாரோ எவரேனும்
கோவே இஃதுன் அருள்மகிமை
திருவே சந்த்ர சேகரமெய்த்
தெளிவே தமிழக வீதியெலாம்
தெய்வீ கப்பண் பொலிகிறது
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.7 நமன்கைப் பற்றிய குழந்தையையும்
நரசிம் மவனச் சன்னதியில்
நறும்புன் னகையால் மீட்டாயே
நாயக நின்செயல் என்னென்பேன்
சமய சாதி பேதமற்று
சகல பேர்க்கும் அருள்கூட்டும்
சாதக, மங்கல நாண்தொலைத்த
சத்திய வதிக்கும் அருள்கூர்ந்து
உமையவள் அணிகலம் அளித்தனையே
உள்ளக் கவலைகள் தீர்த்தனையே
உன்நிழற் படம்நின் ஒப்பிலையேல்
ஒளியால் சிதற பக்தர்க்கும்
இமைகள் சிமிட்டிபின் அருள்செய்த
இறைமருக் கொழுந்தே சிருங்கேரி
ஏந்தல் சந்த்ர சேகரநீ
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.8 தேவ கோட்டை மைசூரில்
திருநெல் வேலி கிராமத்தில்
சீரங் கத்தில் மற்றும்நின்
சிறுதாள் பட்ட இடமெல்லாம்
தேவை யறிந்து மழைதந்த
சித்த போக சிவநாதா
செகமே உய்கநின் கருணையினால்
சிந்தை மகிழப் போற்றுகிறேன்
நாவின் பயனோ இறைவனுக்கு
நாளும் மலர்கள் தொடுப்பதுதான்
நர்த்தன மாடும் நீகூட
நடரா சன்தான் என்றிடவா
தேவே வருக தேன்பிலிற்றும்
செந்தமிழ் அழகு வீதியிலே
சிவமே சந்திர சேகர நீ
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.9 நித்தமுன் பாதம் தரிசிக்க
நெரூர் வித்யா சங்கரர்போல்
நிலமிசை எத்தனை எத்தனைபேர்
நெஞ்சம் உருகி நிற்பாரோ?
சித்த புருடன் நீயிங்கே
சிவமாய் நிற்ப தறியாமல்
சித்தம் பிறழ்ந்தவன் என்றாரும்
சித்தித் துணர அருள்செய்த
முத்தா மோக்ன முழுமதியே
முறுவல் பூத்த அருட்தடமே
முருகவ தாரம் நீயெனவோ
முன்வினை தன்னை மூழ்கடிக்கும்
வித்தே ஞானம் விரிசுடரே
வியாபக சந்திர சேகர,தேன்
வெற்பே செந்தமிழ் வீதிகளில்
சிறுதேர் உருட்டி அருளுகவே!

10.10 விட்டு விடுதலை ஆகிவிட
வேட்கை கொண்டனை ஏனய்யா
விரும்பி வந்த பக்தரெலாம்
விழிகள் பூத்துப் போவாரே
பத்மா சனத்தில் நதிமீது
படர்ந்து காயம் உகுத்துவிட
பாவித் தனைஏன் பெருமானே
பக்தர்கள் மீது பரிவிலையோ?
இத்தரை மீதறப் பரிபாகம்
யாவும் போதுமென் றெண்ணினையே
இறைவன் திருவடி நிழலின்கீழ்
இறப்பை வென்றுல காள்கின்றாய்!
சிததாய் அசித்தாய் சிருங்கேரி
திருமடம் வாழும் கோகுலனே
சீர்சந் திரசே கரகொழுந்தே
சிறுதேர் உருட்டி அருளுகவே!



# ஜகத்குரு
# ஸ்ரீ ஸ்ரீ சந்திரசேகர பாரதி
# மஹா ஸ்வாமிகள்
# திருப்பள்ளியெழுச்சி

## வள்ளல் பிரானே வரமருள்க

பள்ளி யெழுச்சியொன்று பாடவோ. மெய்ஞ்ஞான
வள்ளல் பிரானே வரமருள்க – கள்ளமிலா
நெஞ்சுவக்க உன்னை நினைந்தேன் இன்றெனக்குத்
தஞ்சமேநின் தாமரைத் தாள்!

தாள்போற்றிப் பாடுவன் சந்திர சேகர
ஆழ்கடல் தந்த அமிழ்தனையாய் – வாழ்நாளில்
யான்பெற்ற பேறெனவோ எந்தை புகழ்பாடல்
வான்மழைபோல் என்னகத்து வா!

வருக வருகவே வண்டமிழ்ப் பாக்கள்
தருக தருகவே தாய்போல் – உருகுமன(து)
உள்பசி போக்குவாய் ஒண்சுடரே நீயெனக்கு
அள்ளரும் செந்தேன் அமிழ்து!

# பள்ளியெழுச்சி

1. விண்ணில் பரிதி விழித்தது கதிர்கள்
    வியன்புல வரங்கில் விரிந்து பரந்தன
கண்ணின் மணிகள் கவின்கொண் டசையக்
    கானம் இசைத்துப் புட்கள் பறந்தன
மண்ணின் பசுமை மடிகளில் பனிவெண்
    மழலைக் குழந்தைகள் மகிழ்ந்து நெகிழ்ந்தன
பண்ணின் அழகா, சந்திர சேகர
    பாரதி பள்ளி யெழுந்தரு ளாயே!

2. ஆதி சங்கரர் சிவஅவ தாரம்
    அற்புதன் நீயோ அவர்பிறப் பாகச்
சோதியென் றாயினை, சூழ்ந்தவர்க் கெல்லாம்
    சுபிட்சம் நல்கியச் சுந்தர மாதவ
வேதமும் நீயே விளக்கமும் நீயே
    விழிகள் மூடியேன் இன்னும் துயிலுதி?
ஆதவன் காண்நீ சந்திர சேகர
    அய்யா பள்ளி யெழுந்தரு ளாயே!

3. வேதிய ரென்றும் வேற்றவ ரென்றும்
    வியனுல கத்தில் சாதிகள் எதற்கென
ஓதிய ஞான ஒளிர்முக வரசே
    உள்மனத் தான்மவி சாரமோ? துயிலோ?
பாதியைத் தானிறை பாவைக் கீந்தனன்
    பருவுடல் முழுமையும் நதிமகட் கீந்த
மாதவா, சந்திர சேகர மங்கல
    மாகன, பள்ளி யெழுந்ரு ளாயே!

4. இன்பம் உயிரின் இயல்பென் றெண்ணினை
ஏன்நீ உலகத் தொடர்பு வெறுத்தனை
தன்னில் நிற்கும் தத்துவ மறிந்த
தாயனை யாய்துயில் தழுவுத லென்கொல்?
பொன்னின் வண்ணம் பூமியில் பரந்தது
பூபா ளங்கள் ஏன்நீ கேட்டிலை?
மன்னுமா மணியே சந்திர சேகர
மாயவா பள்ளி யெழுந்தரு ளாயே!

5. துங்கா நதிமேல் துள்ளும் அலைகளின்
துதிப்பா டல்கள் தொகையில் லாதன
கங்கா தீரமும் காட்சிக் கிதுபோல்
கவின்மிகுத் திடுமோ? கால பைரவர்
மங்கா தளித்த நயன தீட்சை
மகிமைஎன்? விழிகள் மயங்குதல் சால்போ?
திங்கள் வதன சந்திர சேகர
தேவே பள்ளி யெழுந்தரு ளாயே!

6. சிந்தம் பிறழ்ந்த சிவமென் றுன்னைச்
செப்பிலென்? உனக்குச் சேவகம் புரிய
நித்தம் வந்திவண் நிற்பவர் ஆயிரம்
நெடுஞ்சாண் கிடையாய் வீழும் அவர்க்கு
முத்திரை தந்து மும்மலம் அறுக்கும்
முருகே சந்திர சேகர பாரதி
வித்தக ஞான விடியல் விளக்கே
வேந்தே பள்ளி யெழுந்தரு ளாயே!

7. நந்த வனத்துச் சோலைகள் யாவும்
நாணிக் குழையினும் நறுமலர்ப் பூக்கள்
கந்தம் அவிழ்த்துக் கதிர்நகை யோடு
காட்சிக் கிழைதல் காண்குதி காண்குதி
சுந்தர விழிகளில் சோர்வா? இறையைச்
சூளுரைத் திமைகள் காக்கின் றனவோ?
சந்திர சேகர பாரதி சுவாமி
சரணம், பள்ளி யெழுந்தரு ளாயே!

8. நாத்திக ராயினென் நாமம் ஜெபித்து
நாளும் தொழுதெழும் ஆத்திக ராயினென்
வேற்று மதத்து வித்தக ராயினென்
வேத வல்லமை விளங்குன ராயினென்
பூத்து மலருமுன் பொன்முக எழில்முன்
போற்றிப் புகழ்ந்திசை பொழிதல் கண்டனன்!
கூத்தன் அழுக, சந்திர சேகர
குருவே பள்ளி யெழுந்தரு ளாயே!

9. அறமே வாழ்விற் கடித்தள மாகும்
ஆன்ம நாட்டம் அருட்பதம் ஊட்டும்
உறவோ புந்த உயிர்ப்பிணைப் பாகும்
உதற உள்ளத் தோமொலி கேட்கும்
சிறகுகள் விரித்துச் செல்வம் சேர்ப்பதென்
சித்தம் மலங்களுள் சிறைப்ப டலாமோ?
திறவாய் விழிகள் சந்திர சேகர
தேசிக பள்ளி யெழுந்தரு ளாயே!

10. நானே ஒருவன், நானே உலகம்
நானே உள்ளவன் இல்லவன் என்றும்
நானே இருப்பவன் என்பதம் சரண்புகில்
நமன்வந் துன்முன் நடமிடு வானோ
தானே அவனாய் தனித்தா குகவென
சத்திய கீதை தந்தவன் அனையாய்
ஏனோ இனும்துயில்? சந்திர சேகர
இறையே பள்ளி யெழுந்தரு ளாயே!

11. உடம்பைப் பொருட்டெனக் கொண்டாய் இல்லை
உள்ளக் குடங்கருள் ஒளிரும் தீபத்
தடங்கள் பெருக்கித் தரணிக் கீந்தனை
சாகித் யத்துதி தனங்கள் தந்தனை
மடங்களுள் ஞானம் மலரச் செய்தனை
மண்மேல் இனியென் மகிழ்வே காண
முடங்கித் துயில்தலென் சந்திர சேகர
மோகனா, பள்ளி யெழுந்தரு ளாயே!

12. கருநா டகத்தின் கற்பகத் தருநீ
கவிஞர்கள் பலர்தம் காவியப் பொருள்நீ
உருகா தாரிவண் ஒருவர் உளரோ
உன்னுரை கேட்பின் உயிர்கரைந் திடுமே
பருகார் உண்மையில் பாக்கிய மற்றோர்
பாரில் இந்நிலை பாறுதல் கருதி
முருகா சந்திர சேகர பாரதி
முதல்வா பள்ளி யெழுந்தரு ளாயே!

13. மகுடம் தரித்த மன்னர் பலருன்
மகிமை அறிந்து மண்டியிட் டுவந்தனர்
நகுதற் புரிந்த நாத்திகர் சிலருன்
நாவன் மைமுன் நாணிக் குனிந்தனர்
மிகுமோ மொழியென மிடிகண் டோரும்
மிகுதற் பொருட்டு மிசைமிக் கூர்ந்தனர்
குகநேர் அழகா சந்திர சேகர
குருவே பள்ளி யெழுந்தரு ளாயே!

14. மலையும் காடும் சூழ்ந்து மகிழ்தலம்
மாதவப் பேறு மலர்தலம் சங்கரர்
சிலையால் பொலிந்த எழில்சிருங் கேரி
சீர்வளம் மலிந்த சிவதலம் ஆங்கே
கலைகள் சிறந்தன காவியம் சிறந்தன
கடவுள் கருணை கனிந்தவப் பதியில்
நிலைகொண் டவனே சந்திர சேகர
நின்மல பள்ளி யெழுந்தரு ளாயே

15. உயிராய் உயிரின் ஒளியாய் உணர்வில்
ஒன்றிக் கலந்தவர்க் குறுதுணை ஆகிப்
பயிராய் அவர்மனப் பண்புகள் ஓங்கப்
பரமன் திருவடிப் பதங்கள் இணைய
செயிர்தீர் வரங்கள் சிறப்புடன் நல்கும்
செந்தா மரைமுகச் சிவஒளி வடிவ
மயூர வதன சந்திர சேகர
மணியே பள்ளி யெழுந்தரு ளாயே!

16. ஏழை என்றும் செல்வ ரென்றும்
ஏதும் பேத மில்லா தருள்செய்(து)
ஊழின் வல்லமை உலுக்கும் ஞான
ஒண்சுட ரழக நந்தவ னத்தெமன்
கோழை யானதென் கொண்ட உயிரைநின்
குறுக்கீ டதனால் கொடுத்தனன் அன்றோ?
யாழின் இசைகேள் சந்திர சேகர
எந்தாய் பள்ளி யெழுந்தரு ளாயே!

17. கன்னட மொழியிற் பண்டித னாயினும்
கன்னித் தமிழ்நின் கனியிதழ் வழியே
மின்னற் பூவென மேதினி உதிர்கையில்
மித்திர பேதம் தவிர்த்தனம் அய்யா!
கன்னற் கரும்பே கடவுள் அறச்சீர்
கண்டு மகிழ்ந்தவ காவியம் பாடி
உன்னற் கறியேன் சந்திர சேகர
ஒளியே பள்ளி யெழுந்தரு ளாயே!

18. பிள்ளைத் தமிழில் பிள்ளையென் றாகிப்
பேரருள் புரிந்த பெரும ஞானம்
அள்ளக் குறையா அமிழ்தப் பெருக்கே
ஆழி கடப்பதற் கருந்துணை ஆனவ
உள்ளக் கிடக்கைகள் உரைப்பதற் கறியேன்
உணர்வுக் குவியல்கள் ஓம்ஓம் என்ப
வள்ளல் பெரும சந்திர சேகர
வாசவ பள்ளி யெழுந்தரு ளாயே!

19. தேன்உண் டால்தான் தேன்சுவை புரியும்
தினமும் பற்பல நூற்களைத் தேடித்
தான்ஆய்ந் தென்பயன்? தவமுனி நின்றிருத்
தாள்பணி யார்க்கத் தகுதியும் வருமோ?
வான்முகி லனையாய் வான்முகி லாகி
வளந்தர நின்ற சந்திர சேகர
ஆன்மிக வரசே அருளே அமுதே
அய்யா பள்ளி யெழுந்தரு ளாயே!

20. கல்கத் தாவில் காளி கோயிலில்
கம்பன் கண்ட அனுமனுக் காகக்
கல்லில் ஓர்சிலை, கலவரம் தணித்துக்
கருணைகொண் டமர்த்திய காலடி மைந்த
செல்லரித் தறநெறி சிறுத்து மானுடம்
சிதைகிற தின்றேன்? சிந்தை குளிர்ந்து
நல்லறம் கருதி சந்திர சேகர
நாயக பள்ளி யெழுந்தரு ளாயே!

21. மங்கல நாணை நதியில் தொலைத்தொரு
மாது கலங்க மனம்மிகக் குளிர்ந்து
தங்கட ணாகக் சாரதா அன்னையின்
சரடெடுத் தீந்த சத்திய மோகன
பொங்கும் உணர்வுகள் பூரித் தடங்கலுன்
பொற்றாள் பதமிப் போதத் தெளிவுடன்
இங்கே குவிந்தனம் சந்திர சேகர
எம்மான் பள்ளி யெழுந்தரு ளாயே!

22. பகவத் கீதா பாரா யணம்செய்
பாரத மைந்தர் சத்திய மூர்த்தி
மிகுமிசை சீலம் மேம்பட வருளி
மென்னகை யோடு மித்திர ளாக்கிய
முகமதி யழக முல்லைச் சிரிப்பில்
முத்திக் கொருவழி முன்வைப் பவதவ
இகபரம் வென்றனை சந்திர சேகர
எந்தாய் பள்ளி யெழுந்தரு ளாயே!

23. சந்திர சூடர், சாரதா அன்னை
தந்தை தாயென வரித்தவ நேப்பாள்
வந்தனைக் குரிய வீர விக்ரமர்
வேந்தரே ஆயினும் வினைவந் தழுத்த
நின்பத மன்றோ சரணம் புகுந்தனர்
நெஞ்சறி வுறுத்த நீதரு ஸ்ரீமுகத்
தென்னே பரிவு? சந்திர சேகர
திருவே பள்ளி யெழுந்தரு ளாயே!

24. வருண ஜெபம்நீ வந்தித் தொலிக்க
வந்தது மழைஇவ் வரலா றுண்மைநின்
கருணையின் சான்றெனக் கண்டவர் களிக்க
கண்கள் மூடினை காவல ஏன்கொல்?
இருளும் மிகுந்தது எங்கும் வறட்சியின்
இறுக்கம், அய்யநீ இன்முகம் காட்டத்
தருணம் இஃதே சந்திர சேகர
தயாபரா பள்ளி யெழுந்தரு ளாயே!

25. நிலமிசை நீடு வாழ்தல் வேண்டின்
நின்தாள் பணிதல் நித்திய கடனே
தலமெது வாயினன்? தவநிலை நெஞ்சகத்
தாளிடைக் கருதின் தண்மை பெருகும்!
நலமருள் சீல நாடிநின் முன்வரு
நாகத் திற்கும் நறும்பால் ஈந்து
புலன்மகிழ்ந் தனையோ சந்திர சேகர
புனித பள்ளி யெழுந்தரு ளாயே!

26. வைரம் பாய்ந்த வைராக் கியமனம்
வாய்த்தவ ஞான வள்ளல் நின்பால்
ஐயம் கொண்டே அணுகிய பேர்க்கும்
ஆன்ம போதம் அருளிய தேவா
பொய்யோ உலகிது, புண்ணியன் நின்தாள்
பொருந்தியோ ரிவ்வுரை புகல்வரோ இருளடர்
வையக விடிவே சந்திர சேகர
வாசவ பள்ளி யெழுந்தரு ளாயே!

27. உடம்பா ரழியின் உயிரார் அழிவர்
உண்மைப் பொருளென் உளன்நீ இன்றும்
தடம்பார்க் கின்றோம் நின்திரு வடிகள்
தாரணி யாண்டும் தருமமாய்த் தழைக்க
கடந்தவர் கோடி காட்சிக் கினிதெனக்
கட்டுண் டிருப்பவர் கணக்கிலர் ஈண்டு
திடம்மிக வந்தோம் சந்திர சேகர
தேவே பள்ளி யெழுந்தரு ளாயே!

28. விட்டு விடுதலை ஆக விழைந்தனை
வெங்கா யத்துடல் வீணென் றெண்ணினை
பட்டா டம்பரப் பரிசு தவிர்த்தனை
பாமரர்க் கும்அருள் பரிந்து வழங்கினை
கொட்டா ரக்கரை குடிசைஎன் றாலும்
கூர்விழி நோக்கில் பேதமில் லாதவ
அத்தா அரசே சந்திர சேகர
அய்யா பள்ளி யெழுந்தரு ளாயே

29. வானார் கோபுரம் வளந்தரு நெல்லைநீ
வருகை தந்தவண் வைகிய பொழுது
ஞானா னந்த பாரதி சுவாமிநின்
நயன தீட்சைக் குளம்கொண் டிக்கையில்
ஏனோ உடல்நலம் கெட்டது ஐயன்நீ
எப்படி அறிந்தனை? அவரகம் சென்று
தானாட் கொண்ட தகைமையென் சொல்ல
தயாபரா பள்ளி யெழுந்தரு ளாயே!

30. "அபிநவ வித்யா தீர்த்த சுவாமிகள்"
அடுத்த வாரிசென் றருள்பா லித்து
புவிமகிழ்ந் திடநற் போத மளித்துப்
பொருந்துதற் கண்டு பூரித் துவந்த
தவநிறை முதல்வ சாத்திர மறைகள்
தன்னிக ரில்லா தத்துவம் கண்டவ
சிவவருள் பாலா, சந்திர சேகர
திருவே பள்ளி யெழுந்தரு ளாயே!

31. விவேக சூடா மணிக்கு விளக்கம்
விரித்து மகிழ்ந்தனை விதையதற் கீன்றது
சிவச்சீர் காலடி செழும்பதி யாமோ
சிந்தையுள் நின்ற சங்கரர் அருளோ
நவபா ரதத்தின் ஆன்மிக வட்ட
நாயக நின்னுரை நாளும் பற்றிடில்
கவலுமோ மானுடம் சந்திர சேகர
கதிரவ பள்ளி யெழுந்தரு ளாயே!

32. காலடி ஆதி சங்கரர் பூமி
கடவுள் நடந்து மகிழ்ந்த திருத்தலம்
வாலறி வுடையோய் வாசவ நீயவண்
வருகை புரிந்து வாழ்ந்தஓ ராண்டும்
காலணி அணியா திருந்தனை, என்னே
காருண் யாநின் களிகூர் பக்தி?
பாலக சீல சந்திர சேகர
பாரதி பள்ளி யெழுந்தரு ளாயே!

33. எந்த சமயமும் நன்றே எவரையும்
இழித்துரை யாதீர் என்றறி வுறுத்தி
சொந்தச் சமயச் சுடர்விளக் கேந்தி
துறவறப் பெருமை துலங்கச் செய்தவ
விந்தைநின் ஆட்சி வினைகளின் மாட்சி!
வேதப் பொலிவுநின் விழிகளின் காட்சி!
சந்திர சேகர பாரதி சுவாமி
சரணம் பள்ளி யெழுந்தரு ளாயே!

## நூற்பயன்

1. பிள்ளைத் தமிழோடு பள்ளி யெழுச்சியொன்றும்
உள்ளம் மகிழ உவந்துரைத்தேன் – அள்ளரும்சீர்
ஞானச் சுடரே நறுங்கவிதைப் பாக்களையிந்
நானிலமும் காண்க நயந்து!

2. நயந்து மகிழ்ந்திவற்றை நாதன்தாள் வைக்க
வியன்கலித் தீவினை வீழும் – முயன்றொருவர்
ஆன்ம பயிற்சிக்கண் ஆற்றொழுக்காய் நிற்பாரேல்
“தான்”மறையும், ஈசனவர் தான்!

3. ஈசனவர் தானாயின் இன்பம்பே ரின்பமே
பாசம்பின் ஏதவர்க்குப் பற்றறுக்க – சாசுவதப்
பேறொருவர் வாழ்வில் பெறுங்காலை மேன்மேலும்
ஊறாதோ தெய்வீகம் உள்!

## விருப்ப அந்தாதி வெண்பா இருபது

1. துங்கா நதிதீரத் தூயவன் தாள்பணிந்து
பொங்கும் தமிழால் புகழ்பாட — மங்கலங்கள்
தானே பெருகின சந்திர சேகரத்
தேனேஎன் வாழ்வியக்கச் சீர்

2. சீர்பெருக வேண்டும்! சிருங்கேரி தாபனத்துப்
பேர்நிலைக்க நின்ற பெருமானே — நேருனக்கு
யாரை இயம்புவதோ எப்படித்தான் போற்றுவதோ
கார்முகில்போ லானவன்நீ காண்!

3. காட்சிக் கினியவன்நீ காலடியின் மைந்தன்நீ
மீட்சி எனக்குன்சீர் மேவுதலே — நாட்சிறகு
மெல்ல அசைந்தாலும் மெய்ஞ்ஞானம் காண்பதற்கு
உள்ளம் விழைகிறதே ஓர்ந்து

4. ஓர்ந்(து)ஆதி சங்கரர் ஒண்சுடர் தீபத்தைத்
தேர்ந்துன்பால் கண்டு தெளிவுற்றேன் — பேர்ந்தனவே
மாய இருள்மயக்கம் மானசீக மானதவத்
தூய்மையே என்வாழ்வின் தூண்!

5. தூணுக் கடித்தளமாய்த் தோன்றாத் துணையாகக்
காணக் கிடைத்தவருள் காவலனே — ஞானவொளி
சந்திர சேகர பாரதிசு வாமிநின்தாள்
செந்தமிழ்போல் தந்ததிங்கு சீர்!

6. சீர்பெற்றேன் உன்னில் சிவம்கண்டேன் உன்றன்மேல்
பார்வியக்கப் பாடல் பலதரவே – கூர்மழுங்கிப்
பாழ்வினைகள் ஓயாதோ பற்றும் திருவருளால்
ஊழ்சிறுக்க வேண்டும் உலர்ந்து!

7. உலர்ந்துலர்ந் தின்றிவ் வுலகத் தறங்கள்
நலிந்து கெடுவதேன்? நன்மை – பொலிந்தினிமேல்
ஆன்ம தளத்தில் அரசியலும் மானுடமும்
பான்மைகொள உய்வதென்றிப் பார்?

8. பாருய்தற் காகப் பரமன் அருள்மிகுக
சீருற்ற ஞானச் சிருங்கேரி – பேரருள்கூர்
சாரதா அன்னையத் தாள்பணிந்து வேண்டுவோம்
நேரா தினிதுன்பம் நேர்!

9. நேர்நின் றியம்பநின் நீழல் தனிலமர்ந்து
வேர்காண ஏங்கும் விருத்தன்நான் – ஆர்வமுடன்
தாள்போற்றி இங்கே தமிழ்கொண்டு வந்தனன்காண்
ஆள்முதல்வ செய்க அருள்!

10. அருள்பூத் தடியார் அவலங்கள் தீர்க்கும்
இருள்தீர் பரிதியே என்றன் – மருள்நீங்க
சந்திர சேகர பாரதி என்றுநீ
வந்தெனைக் காப்பாய்சொல் வாக்கு!

11. வாக்கு கனவில் வழங்குதல் கூடுமன்றோ
போக்கும் வரவுமிலாப் புண்ணியனே – நீக்கமற
வானாய்ப் பரந்தவன்நீ வாழ்த்துகிறேன் என்யாக்கை
ஊனாய் உயிராய் ஒளிர்!

12. ஒளிநீயே ஆயினென் உள்ளவிருள் நீங்கும்
அளியேஎன் வாழ்வின் அறமே – வெளியாவும்
உன்னையே கண்டிங் குவப்பேனென் றாகின்பின்
என்னதான் வேண்டும் எனக்கு!

13. எனக்குனக் கென்றே இனிவேண்டாம் பேதம்
மணக்கும்நீ என்னுள் மலர்க – தினப்படியாய்ப்
பாடற் பலதருவேன் பைந்தமிழில் நீமகிழ்ந்து
கூடற் கிசைவாய்க் குளிர்ந்து!

14. குளிர்ந்த புனலிடத்துக் கூடிக் களித்துள்
ஒளித்திங் குலவுகிற ஊற்றே – விழித்திங்கு
வித்யாஸ்ரீ சங்கரர்தம் வேட்பில் நிலைத்தாயோ
புத்தேள் கவசம் புனைந்து!

15. புனையுமென் பாடல் பொருந்திய தேவே
நனைகநான் நின்னருள் நாளும் – இனிமைகூர்
அன்பாலின் றென்னையாட் கொண்டாரே தெய்வீகக்
கன்னல்வித் யாசங் கரர்!

16. சங்கரர் தந்த சமயக் கருத்துகளைத்
தங்கட னாய்க்கொண்டு தாரணியில் – சங்கையற
ஓதி ஒளிர்கின்றார் ஓய்வின்றி மெய்ஞ்ஞானத்
தாதும் அவிழ்க்கின்றார் தான்!

17. தான்வீழ வென்றவர் சத்தியத்தில் நின்றுயர்ந்து
வான்போகம் கண்டு வளர்பவர் – நான்மறையும்
கற்றுக் கலங்கரைபோல் காண்பார்க் குரைப்பவர்
பற்றறுத்துக் கொண்டவர்தம் பால்!

18. பால்போல் சிரிப்பு பளிச்சென் றெவரையுமே
நூல்போல் இழுக்கின்ற நுண்மைநலம் – கால்பற்றி
நிற்பவர் ஈண்டு நிலைத்தவர் யோகத்தால்
தற்பரனாய் ஆனார் தனித்து!

19. தனித்தவர்பால் யான்கண்ட சாகித்யப் பற்றே
மனத்தைப் பிணித்ததம் மாட்சி – நினைக்க
நினைக்கபே ரின்பமாய் நீடிக்க இந்நூல்
அனைத்துமே அன்னார் அருள்!

20. அருள்வாழ்க! சந்திர சேகரசு வாமி
பொருள்பாட அய்யன்தாள் போற்றி – அருள்தவச்சீர்
வித்யாஸ்ரீ சங்கரர்க்கும் வீமலர் சூட்டினன்
பத்திரண்டாய் ஆனதிங்கே பா!

# ஸ்ரீ வித்யா சங்கரசரஸ்வதி சுவாமிகள்

காவிரி மருங்கில் கனகநென் மணிகள்
காட்சிக் கினிதாய்க் கவின்கொழித் திலங்க
பாவிரித் தனஎன் பைந்தமிழ் நெஞ்சம்
பரமன் அருள்மிகப் பரவசம் நல்கத்
தாவிய ணைந்தன தாள்கள் அங்கே
சற்குரு சதாசிவப் பிரம்மம் சன்னதி
மேவி எனையாட் கொண்டது நெரூரின்
மேன்மைகள் ஈண்டிங் கியம்பவும் தகுமோ?

அழகுக் கழகாய் அருளுக் கருளாய்
அக்ர காரத் தாஸ்ரமம் ஒன்று!
பழகுத் தமிழ்போல் பயிலுதற் கினியப்
பண்பறம் சான்ற பால சுவாமிகள்!
மழைமுகில் அனைய மந்திரப் புன்னகை
மணியிதழ் தழையஎன் மனத்தகம் புகுந்த
விழைவுயர் அந்த வித்தகர் யாரெனின்
வித்யா சங்கர சரஸ்வதி சுவாமிகள்!

சேலம் பிறந்த தெய்வத் திருமகன்
சிருங்கேரி மடத்தில் பிரம்மோ பதேசம்!
ஆலம் விதையொன் றகல்மரம் ஆனதென்
றறிந்தவர் வியக்க அய்யன் வேதமும்
சீலம் மிகுந்த செந்தமிழ் நூற்களும்
சிறப்புறப் பயின்றவர் எனக்கொரு நாளில்
கோலத் தவமகன் சந்திர சேகரக்
கோமகன் பற்றிய குறிப்புகள் தந்தார்!

நூலொன் றெழுதிட ஆணை யிட்டவர்
நுண்விழி யாலருள் நோக்கியென் நெஞ்சப்
பாலகம் புகுந்து பைந்தமிழ் அமுதைப்
பக்குவப் படுத்திப் பாடவும் வைத்தார்!
ஏழையேன் எனக்கிதோ இன்பத் தின்பம்
இம்மையும் மறுமையும் எனக்குயிர் காப்பு!
ஆழமாம் அன்பின் கருணைகொல் அந்த
அய்யன் தாள்களுக் கடியவன் நன்றி!

# நூலாசிரியர்

கவிஞர் **தமிழ்க்குழவி**
**(ஆ. விசுவநாதன்)**

நிறுவனர் : **குறளகம்**
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம்
51, கீழராமன்புதூர், நாகர்கோவில் – 629 002.
அ.பே : 94425 80620

## பணிகள்

1. வாரம் தோறும் திருக்குறள் வகுப்பு.
2. மாதம் தோறும் திருக்குறள் சிந்தனை முற்றம்.
3. ஆண்டு தோறும் திருவள்ளுவர் தினவிழா, திருக்குறள் போட்டிகள், பரிசளிப்புகள், பள்ளி மாணவர்களுக்கு இலவசச் சீருடை வழங்கல் மற்றும் அறப்பணிகள்.

## படைப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழ்க்குழவி கவிதைகள் | (1994) |
| 2. | அம்மன் அருட்பா நூறு | (2011) |
| 3. | யோகி ராம்சுரத்குமார் பிள்ளைத் தமிழ் | (2011) |
| 4. | ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திராள் பிள்ளைத் தமிழ் | (2012) |
| 5. | ஸ்ரீ சீரடி சாய்பாபா பிள்ளைத் தமிழ் | (2013) |
| 6. | ஸ்ரீ ரமண மகரிஷி பிள்ளைத்தமிழ் | (2013) |
| 7. | குறள் மணம் | (2014) |
| 8. | ஸ்ரீ சந்திரசேகர பாரதி பிள்ளைத்தமிழ் | (2014) |

**தொடர்வன . . .**

திருவருட்பிரகாச வள்ளலார் பிள்ளைத்தமிழ்

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

******



சத்குரு

ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திராள்

சிருங்கேரி

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பாரதிதீர்த்த மஹாஸ்வாமிகள்



நூல் வெளியீடு:

ஸ்ரீ ஹரிஹர சேவா டிரஸ்ட்,
ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம்,
அக்ரஹாரம், நெரூர்,
கரூர் மாவட்டம்-639 004.
போன்: 94435 14413, 04324 282263.